

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - சித்திரை - 2025 - மே | இணைய வழி - மலர் - 2 - இதழ் - 9

# ஸ்ரீ சித்திர குப்தர்

ஸ்ரீ சித்திர குப்தர் ட்ரஸ்ட் பிள்ளையார்பட்டி

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – சித்திரை

2025– மே

இணையவழி மலர் 2 – இதழ் 9

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

தீபா ராஜேஸ்வரி

கோவிலூர்


## பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

## சித்திரா பௌர்ணமியும் சித்திர குப்த நாயனாரும்

சித்திரைத் திங்களில் சிறப்பான நாள் சித்திரா பௌர்ணமி நன்னாள் ஆகும். இந்நன்னாளில் சித்திர குப்த நாயனாருக்கு விரதம் இருந்து வழிபடுவது வழக்கமாக இருந்துவருகிறது. இந்நன்னாள் சித்திர குப்த நாயனாருக்கு உரிய நாளாகும்.

வீடுகளில் தரையில் சித்திர குப்த நாயனாரைப் படமாக வரைந்து அவருக்கு நீர் மோர், இளநீர், பானகம், இனிப்பு மற்றும் உப்புக் கொழுக்கட்டை ஆகியவற்றை வைத்துப் படைத்து வழிபடுவது மக்களின் வழக்கமாக இருக்கிறது. சித்திர குப்த நாயனாரைப் படமாக வரைவது என்பது அவரின் வரலாற்றை அறிவிப்பதாக உள்ளது.

அனைத்து உயிர்களின் காலக்கணக்கினை அறிந்து அவற்றிற்கு சுவர்க்கம் போன்றவற்றை வழங்கிட காலதேவன் நிர்ணயிக்கப்படுகிறான். அப்போது உயிர்களின் கணக்கினை எழுதிட எனக்கு ஓர் உதவியாளன் தேவை என்று காலதேவன் கோரிக்கை வைக்கிறான். இந்நேரத்தில் பார்வதி தேவி படம் ஒன்றைத் தன் கரங்களால் வரைகிறார். பரம்பொருளான சிவபெருமான் காலதேவனின் கோரிக்கை ஏற்று பார்வதி தேவி வரைந்த படத்தில் உள்ள தேவனை தன் உயிர்க்காற்றால் உற்பத்தி செய்கிறார். இதன் மூலம் பிறந்தவர் சித்திர குப்த நாயனார் என்று புராணக் கதை அமைகின்றது.



செல்வம் பெருகும். நெடுநாளைய வழக்குகள் நியாயத்தின் பக்கம் முடிவு பெறும்.உடல் நலம் பெருகும். உயிர்களின் பாவக் கணக்கு குறையும். அறத்தின் பக்கம் உயிர்கள் நடக்கும். இவ்வாறெல்லாம் பல பலன்களைச் சித்திர குப்த நாயானார் வழிபாடு தருகின்றது.

சிவபெருமானே தங்கப் பலகையில் வரைந்த உருவம் சித்திர குப்த நாயனார் என்றும் மற்றொரு புராணக்கதை குறிக்கிறது. இவரை வளர்த்தவர்கள் இந்திரனும் இந்திராணியும் ஆவார்கள். அகலிகையினால் சாபம் பெற்ற இந்திரனுக்குக் குழந்தை இல்லாத நிலையில் சித்திர குப்த நாயனாரை எடுத்து வளர்த்தாகவும் கதை வளருகின்றது.

சித்திர குப்த நாயனாரைச் சித்திரா பௌர்ணமி நன்னாளில் வணங்குவதால் நன்மைகள் பலகிடைக்கின்றன. இவருடைய வரலாற்றை அன்றைய தினம் படிப்பத்தால் நிறைவான மகிழ்வான வாழ்க்கையைப் பெறலாம். திருமணம் கைகூடும். மழலைச்

இவருக்கான தனிக்கோயில்கள் இந்தியாவில் பல இடங்களில் உள்ளன. புகழ்பெற்ற கஜூராஹோ திருக்கோயிலில், சித்திர குப்த நாயனாருக்குக் கோயில் உள்ளது.



காஞ்சிபுரத்திலும் சித்திர குப்த நாயனாருக்குத் தனிக் கோயில் உள்ளது. சிதம்பரத்தில் நூற்றுக்கால் மண்டபத்திற்கு வடக்கே சிவகாமி

அம்பிகைக்கு தனி சன்னிதி உள்ளது. இதன் வெளிச்சுற்று பிரகாரத்தில் தென்கிழக்கு திசையில் சித்திரகுப்தருக்கு தனி சன்னிதி அமைக்கப்பட்டுள்ளது. மேற்கு நோக்கி அமைந்துள்ள இந்த சன்னிதியில், சித்ரகுப்தர் அமர்ந்த நிலையில் கையில் எழுத்தாணியுடன் காட்சி தருகிறார். இவருக்குச் சித்திரா பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடுகள் நடக்கின்றன.

## கோவிலூருக்கு வரும் சித்திர குப்த நாயனார்

நமது கோவிலூரில் தென் சபாநாயகர் திருக்கோயில் செட்டிநாட்டுச் சிதம்பரமாக விளங்கி அருள் சுரந்து வருவது நாம் அனைவரும் அறிந்ததே. தென் சபாநாயகர் திருக்கோயிலில் சித்திர குப்த நாயனாருக்கும் சன்னதி அமைந்து கோவிலுரும் சிதம்பரமாகவே காட்சி அளிக்க இறை திருவருள் கூட்டி வைத்துள்ளது. குன்றக்குடிக்கு அருகே அருள்மிகு குபேரர் திருக்கோயில் செல்லும் வழிக்கு முன்னால் சோலை நடுவே அருள்மிகு சித்திர குப்தருக்குத் திருக்கோயில் உள்ளது. இக்கோயில் பிரசன்ன அடிப்படையில் நோய் நீங்கும் வேண்டுகோளை முன்வைத்துக் கட்டப்பெற்றுள்ளது. இக்கோயிலின் அருள் பெருகவும், சித்திர குப்த நாயனாரின் அருள் காட்சி அனைவருக்கும் எளிதில் கிடைக்கவும் திருவருள் கை கூட்டியுள்ளது.

இக்கோயில் கோவிலூர் தென் சபாநாயகர் திருக்கோ யிலின் உப கோயிலாக அந்த வளாகத்திலேயே அமைக்கப்பட திருவருள் கூட்டியுள்ளது. ஆன்மீக அறிஞர் திருமிகு சொ.சொ.மீ ஐயா அவர்களுடன் கலந்துரையாடியதில் அவர்கள் சிதம்பரத்தில் சித்திர குப்த நாயனார் சன்னதி உள்ளது. அதுபோலு கோவிலுர் சிதம்பரத்திலும் சித்திர குப்த நாயனார் சன்னதி அமைவது மிகப்பொருத்தம் என்றார்கள். இதன் காரணமாக கோவிலூர் தென் சபா நாயகர் திருக்கோயிலில் சிவகாமி அம்மனுக்கு அருகில் சித்திர புத்திர நாயானார் கோயில் இடம்பெயர்த்து மூர்த்தி பெயர்த்து வைக்கப்பட திருவளருள் கை கூட்டியுள்ளது. பிறந்தது சிவபெருமானால், வளர்ந்தது இந்திரனால் என்ற சித்தி புத்திர நாயனார் கதைப்படி இக்கோயில் பிறந்தது குன்றக்குடிக்கு அருகில். வளர்வது கோவிலூரில் என்று கொள்ளலாம்.

மேலும் குன்றக்குடிக்




கோயிலில் உள்ள இரு கைகளையும் அபய முத்திரை காட்டும் அருள்மிகு குபேர விநாயகரும், அருள்மிகு ஆஞ்சநேயரும் கோயிலூரில் இனி அருளாட்சி புரிவார்கள். விநாயகர் நால்வர் தனி சன்னதி அமைய உள்ளது. தென்சபாநாயகர் திருக்கோயிலின் பெருமாள் சன்னதி அருகில் ஆஞ்சநேயர் சன்னதி அமைய இருக்கிறது. கருடாழ்வாரும் வெளிவந்து அருள் வழங்க உள்ளார். இதனோடு மேலும் கால பைரவருக்குத் தனிக் கோயிலும் அமைய ஏற்பாடாகி வருகிறது. விரைவில் பாலாலயம் அமைத்து இப்பணிகள் முழுமை பெற உள்ளன.

தென் சபாநாயகர் திருக்கோயில் தில்லையம்பதியாகவே காட்சி அளித்து வருவது பெருஞ்சிறப்பு. அனைவரும் இவ்விழாக்களில் கலந்து கொண்டு இறையருள் பெற அன்புடன் அழைக்கிறோம்.

## 360 டிகிரி காட்சி வடிவில் நகரக்கோயில்களும் தமிழகத்துப் புகழ் மிக்க கோயில்களும்

காசி, பத்ரிநாத் போன்ற கோயில்களில் நடைபெறும் பூசைகளை அருகில் இருந்து பார்ப்பதற்குப் புண்ணியங்கள் பல செய்திருக்க வேண்டும். அவற்றை அவரவர் இருக்கும் இடத்தில் இருந்தே அனைத்துக் கோயில்களின் பூசைகளையும் அருகிருந்து அனைவரும் பார்க்கும்படியான திரைக்காட்சி வடிவம் தற்போது வந்துவிட்டது. 360 டிகிரி முழுக் கோண அளவில் அருகில் இருந்து பார்ப்பதற்கான காட்சிக் கருவிகள் தற்போது வந்துவிட்டன. இந்தக் காட்சிகளைப் படம் பிடிக்கும் குழுவினரும் நமது நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் காட்சித் தொடர்பியல் (விஸ்காம்) துறையும் இணைந்து தமிழகத்தின் புகழ் மிக்கக் கோயில்களின் சிறப்புக்களை 360 டிகிரி காட்சி

வடிவாமப் பதிவு செய்து மக்கள் அனைவரும் பார்க்க வசதி செய்து தரும் வாய்ப்பு கிடைத்துள்ளது. மிக விரைவில் செட்டிநாட்டு ஊர்களில் உள்ள அனைத்துக் கோயில்கள், நகரக்கோயில்கள் இந்த 360 டிகிரி காட்சி வடிவாக வெளி வர உள்ளன. சிதம்பரம், திருவன்னால்மலை, ராமேஸ்வரம் போன்ற கோயில்களை பதிவாக்கம் செய்யும் பூர்வாங்க வேலைகள் விரைவில் துவங்கும் .சூலை/ஆகஸ்டு மாதங்களில் நகரக் கோயில்கள் பதிவாக்கம் துவங்கத் திட்டமிடப்பட்டுள்ளது விரைவில் அனைத்து கோவில் சிறப்புக்களையும் நமது கோவிலூர் தென் சபாநாயகர் ஆலயத்தில் சிறப்பான காட்சிக் கருவிகளின் துணை கொண்டு நாம் நேரில் கலந்து கொண்டது போன்ற உணர்வுடன் தெய்வக்காட்சி பெறலாம். ஜுன் இறுதியில் காசி கோவில் காட்சிகள் கோவிலூர் தென் சபாநாயகர் திருக்கோயிலில் காணலாம்.

## “திறன் மிக்க கல்வி, உடனடி வேலைவாய்ப்பு, குறைந்த செலவு, நிறைந்த வருமானம்“

இதுவே கோவிலூரில் உள்ள கல்வி நிறுவனங்களின் கொள்கை. இதை நோக்கி ஒவ்வொரு நாளும்



நமது கல்வி நிறுவனங்கள் செயல்பட்டு வருகின்றன.

கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் மெட்சிக் பள்ளி பத்தாம் வகுப்பு மற்றும் பன்னிரண்டாம் வகுப்பு தேர்வுகளில் நூற்றுக்கு நூறு விழுக்காட்டுத் தேர்ச்சியைப் பெற்றுள்ளன. இதற்கு உழைத்த ஆசிரியர்களுக்கு நன்றி மற்றும் பாராட்டு. மாணவர்களுக்கு வாழ்த்து. சிறப்பான மதிப்பெண்கள் பெற்ற மாணவ மாணவிகளுக்கு நமது சிறப்பான வாழ்த்துகள்.

## உடனடி வேலை வாய்ப்பு தரும் பாலிடெக்னிக்

நம்மிடம் உடனே வேலை தரும் படிப்புகளைப் படிக்க என்ன செய்யலாம் என்று கேட்கும் அன்பர்களுக்குப்பலயோசனைகளை நாம் வழங்குகிறோம். குறிப்பாக பாலிடெக்னிக் படிப்பது மிக நன்று. நமது நாச்சியப்ப சுவாமிகள்




பாலி டெக்னிக் கல்லூரியில் மூன்றாண்டு காலம் படிக்கும் மாணவர்கள் அனைவரும் மூன்றாம் ஆண்டிலேயே வளாக நேர்காணலில் (campus interview) வேலை வாய்ப்பினைப்பெற்று வருகிறார்கள் என்பது நமக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. இதைவிட இன்னும் ஒரு படி மேலாக பாலிடெக்னிக் கல்வியில் ஓரிரு பாடங்கில் தேர்ச்சி தவற விட்ட மாணவர்களும் வேலை வாய்ப்பு பெறுகிறார்கள் என்பது நிதர்சனமாக உண்மையாக உள்ளது. பாலிடெக்னிக் படிக்கும் மாணவர்கள் மாதம் 18000 ரூபாய் சம்பளத்தில் உடனடி வேலை வாய்ப்பினைப் பெறுவது எளிது. எனவே நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக்கில் பத்தாம் வகுப்பு படித்து முடித்த மாணவர்களைச் சேர்த்து விடுவது மிக நல்லது. இதில் மெக்கானிக்கல், சிவில், எலெக்ட்ரிகல், எலெக்ட்ரானிக்ஸ் ஆகியவற்றில் மூன்றாண்டு படிப்புகள் உள்ளன. இதற்கான தேர்வுகளைத் தமிழிலும்எழுதலாம். பன்னிரண்டாம் வகுப்பில் எந்தப் பாடம் எடுத்துப் படித்தாலும் பாலிடெக்னிக்கில் இரண்டாம் ஆண்டில் இணைந்து படிக்கலாம். அடுத்த இரண்டு ஆண்டுகளில் பணிவாய்ப்பு உங்களைத் தேடி வரும். இதில் மாணவர்களைச் சேருங்கள். குறைவான கல்விக்கட்டணமே நமது கல்விநிறுவனங்களில் பெறப்படுகின்றன.

## நாச்சியப்ப சுவாமிகள் ஐடிஐ

நல்ல பிளம்பர், எலெக்டிரி சியன் கிடைப்பது என்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. சிறந்த திறன்மிக்க எலெக்டிரிசியன், பிளம்பர் போன்றவர்களை உருவாக்க நமது நாச்சியப்ப சுவாமிகள் ஐ.டி.ஐ செயல்பட்டுவருகிறது. இதில் படித்துச் சொந்தத் தொழில் தொடங்கலாம். பல்லாயிரம் ரூபாய் வருமானம் பெறலாம். உடனடி வேலை வாய்ப்புக்கு இந்தப் படிப்பும் நல்ல படிப்பு.

## கோவிலூர் ஆண்டவர் உடற்கல்வி யியல் கல்லூரியில் புதிய படிப்பு, பி.எஸ்.சி கோச்சிங்

ஆரோக்கியமான வாழ்வே சிறந்த வாழ்வு. கோவிலூரில் உடற்





கல்வியியல் மற்றும் விளையாட்டு அறிவியல் கல்லூரி மிகச் சிறப்புடன் உடற்கல்வி ஆசிரியர்களை உருவாக்கி வருகிறது. இங்குப் பயிலும் மாணவர்கள் உடனடியாக விளையாட்டுத் துறை ஆசிரியர்களாக பணிவாய்ப்பு பெறுகின்றனர். தேசிய அளவில், மாநில அளவில் விளையாட்டு வீரர்களாக விளங்குகின்றனர். அதிகாலையில் இக்கல்லூரி மாணவர்கள் கோவிலூர் பகுதிகளைச் சுற்று உடற்ப யிற்சி, ஓட்டப் பயிற்சி செய்வதை நீங்கள் பார்த்திருக்கலாம். இதில் படிக்கும் மாணவர்களுக்குத் தனியாக ஹாஸ்டல் வசதி உள்ளது. இக்கல்லூரியில் BPES (மூன்றாண்டு ), BPED (இரண்டு ஆண்டு) MPED (இரண்டாண்டு) படிப்புகள் நடைபெற்று வருகின்றன.

தற்போது பி.எஸ்.சி கோச்சிங் (Coaching) என்ற படிப்பு தொடங்கப்படுகிறது. இதனைப் படிப்பதால் சிறந்த பயிற்சியாளராக மாணவர்கள் உருவாக முடியும். கோச் எனப்படும் விளையாட்டுப் பயிற்றுநருக்கு மிக அதிக தேவை உள்ளது. புட்பால், வாலிபால், கபாடி, ஹாக்கி போன்ற விளையாட்டுகளுக்கான 'கோச் ' எனப்படும் பயிற்றுநர்களாக மாணவர்கள் உருவாக முடியும். இதற்குச் சேரத் தகுதி என்பது பன்னிரண்டாம் வகுப்பு தேர்ச்சியும், பள்ளி அளவில் ஏதேனும் ஒரு விளையாட்டில் சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும். அவ்வளவே. இந்தப் படிப்பு தமிழ்நாட்டில் வேறு எங்கும் தொடங்கப்படவில்லை. சென்னையில் உள்ள வி ளை ய ா ட் டு க் க ா ன பல்கலைக்கழகத்தில் மட்டுமே உள்ளது. இதனை முதன் முதலாக கோவிலூர் ஆண்டவர் உடற்கல்வி, விளையாட்டு அறிவியல் கல்லூரிக்குப் பல்கலைக்கழகம் வழங்கியுள்ளது. சிறந்த படிப்பு. சிறப்பான வேலைவாய்ப்பு, குறைவான கட்டணம், நிறைவான வருவாய் என்பதை இப்படிப்பும் நிறைவேற்றித் தருகிறது.



கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் பாடத்திட்டத்திற்கு மேலாக வழங்கப்படும் திறன் மிக்க கல்வி

கோவிலூரில் நாச்சியப்ப சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரி சிறப்புடன் கல்விச் சேவையைச் செய்துவருகிறது. இக்கல்லூரியில் படிக்கும் மாணவர்களுக்குப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்துடன் கூடுதலாக திறன் மிக்க கல்வி வழங்கப்பட்டு வருகிறது.

குறிப்பாக கணினி அறிவியல் துறை அதாவது கம்யூட்டர் சயின்ஸ் துறையில் மாணவர்களுக்கு சிறந்த கம்ப்யூட்டர்கள், ஆன்லைன் வசதி அமைத்துத் தரப்பெற்று திறன் மிக்க செய்முறையுடன் கூடிய கல்வி தரப்பட்டுவருகிறது. பல்கலைக்கழகம் தந்த பாடத்திட்டத்திற்கு மேலாக பல திறன்கள் இங்கே மாணவர்களுக்குச் சொல்லித் தரப்படுகின்றன. Advanced Phython. Power BI, Web Publshing போன்றன மாணவர்களுக்குச் சொல்லித் தரப்படுகின்றன. கணினி துறையில் (Gig workers) என்ற முறை நடைமுறையில் உள்ளது. தேவையான பகுதியை தேவையான அளவில் தேவையான நாள்களில் செய்து தருவது என்ற முறைமை. இவ்வாறு பலரிடமும் அவரவர் திறமையைப் பயன்படுத்திப் பணிகளைப் பெற்றுப் பின் ஒருங்கிணைத்துக்கொள்வது என்பது இந்தமுறையாகும். இதற்கு நாம் மாணவர்களைத் தயார் படுத்தி வருகிறோம். எனவே மாணவர்கள் பி.எஸ்.சி கம்யூட்டர் சயின்ஸ் படிப்பினைப் படித்துப் பயன்பெறலாம்.

பி.எஸ். சி விஸ்காம் என்பதும் சிறந்த படிப்பு. மாணவர்கள் சொந்தமாக போட்டோ, வீடியோ, எடிட்டிங், ஷார்ட்ஸ், ஷார்ட் பிலிம் போன்றன எடுத்து சொந்த தொழில் நடத்தி பல்லாயிரக் கணக்கில் வருமானம் பெறலாம். இந்தப் படிப்பிலும் பல்கலைக்கழகப் படிப்போடு வெர்ச்சுவல் ரியாலிட்டி (virtual reality) என்ற பயிற்சியும் வழங்கப்படுகிறது.

மேலும் இங்கு வணிகவியல்,

தமிழ், ஆங்கிலம் போன்ற பட்டப்படிப்புகளும் வழங்கப்பெற்று வருகின்றன. பல்கலைக்கழகப் பாடங்களுடன் கூடுதல் திறன்கள் இங்குக் கற்பிக்கப்படுகின்றன. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் மாணவர்களைச் சேர்த்து உடனடி வேலை வாய்ப்பினைப் பெறலாம்.

கோவிலூர் ஆன்மீக கிராமமாக, பல்வகை கல்வித்திறன் வளர்ச்சி மையமாக விளங்கி வருகின்றது. இவ்வளர்ச்சியை மக்கள் அனைவரும் பெற்று மகிழ ஆண்டவர் துணை நிற்பார்.

## காசியில் இரு வேளை அன்னதானம்

அன்னதானம் செய்வது மிகப்பெரும் அறம். அதுவும் காசியில் அன்னதானத்தைச் செய்வது மிகவும் புண்ணியம். காசியில் அன்னதானத்தைச் சிறப்புடன் செய்து சிவனருள் பெற கோவிலூர் மடாலயம் உதவி செய்கிறது. நாள் ஒன்று ஐயாயிரம் என்ற திட்டத்தில் வேதம் படிக்கும் மாணவர்கள், மற்றும் எளிய மக்கள் பயன்பெறும் வகை யில்,BHU மருத்துவமனை மற்றும் புற்றுநோய் மருத்துவமனைக்கு வரும் நோயாளிகளின் துணையாளர்களுக்கு பகல் உணவு வழங்கப்பெற்று வருவதைத் தாங்கள் அறிவீர்கள். தற்போது இரவிலும் உணவு வழங்க காசி விசுவநாதர் ஆலய அறக்கட்டளை முன்வந்தள்ளது. இந்த சேவையை வாரணாசி பிரிவு ஆணையர் (Divisional Commissioner) திரு.ராஜலிங்கம் அவர்கள் மே 21ம் தேதி துவக்கி வைத்தார்கள்.

காசியில் மே 29 அன்று பேரூர் சாந்தலிங்க அடிகளாரின் நூற்றாண்டை முன்னிட்டு 250 பேர் கலந்து கொள்ளும் திருவாசக முற்றோதல் திருக்கோயில் வளாகத்தில் நடைபெற



**மேலே காணும் பதிவின் முகநூல் இணைப்புக்குச் செல்ல இங்கே சொடுக்கவும்**

வேண்டுகோள் வைக்கப்பெற்ற நிலையில் நாம் அதற்கு ஒரு துணைக்கருவியாக இருந்து அதனைச் செய்துதர இறையருள் கூட்டி வைத்தது. காசியில்

**சாந்தலிங்க அடிகளாரின் நூற்றாண்டை முன்னிட்டு காசியில் நடைபெறும் திருவாசகம் முற்றோதல் குறித்த முகநூல் பதிவை வாசிக்க இங்கே சொடுக்கவும்**

நாள்தோறும் திருவாசகம் ஓத ஒலிக்க விசுவநாதர் அருள்வார். வாருங்கள் காசிக்கு. அன்னதானம் செய்யுங்கள். அறத்துடன் காசி விசுவநாதரைத் தரிசியுங்கள்.

## காசியில் பயிலும் மருத்துவ மாணவர்களுடன் சந்திப்பு

காசியில் பனராஸ் பல்கலைக்கழகம் சிறந்த பல்கலைக்கழகமாக இயங்கிவருகிறது. குறைந்த செலவில் நிறைந்த கல்வி என்ற கொள்கையுடன் இயங்கி வரும் அப்பல்கலைக்கழக மாணவர்கள், பத்தாயிரம் வெளிப்புற நோயாளிகளுக்கு உதவி செய்யும் மருத்துவப் படிப்பு படிக்கும் மாணவர்கள் தமிழகத்தைச் சேர்ந்த ஐம்பதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் அங்கு கல்வி பயிலுகிறார்கள் சென்ற முறை காசி சென்றபோது உணர்வுநீக்கு மருத்துவத்துறையில்(Anasthetist)கல்வி பயிலும் மாணவர்களைச் சந்தித்து உரையாடினோம். காசியில் தமிழக உணவுடன் மருத்துவ மேல்படிப்பு எம்.டி படிப்பது சிறப்பு என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். நம் தமிழகத்து மாணவர்கள் காசியில் பனாரஸ் பல்கலையில் படிக்க முன்வரலாம்.

எப்போதும் கல்விப்பணி, ஆன்மீகப்பணி, அன்னதானப்பணி, சமுதாய ஒற்றுமை என்று எல்லாம் வல்ல பரம்பொருள் நம்மை வழி நடத்தி வருகிறான். இதற்கு அன்பர்கள் துணை செய்து நல்லபணிகள் நாளும் நடக்க வழி செய்ய வேண்டும். பணிகளில் தடைகள் இல்லாமல் இல்லை. அத்தடைகள் இறைவன் அருளால், தொண்டர் தம் கூட்டுறவால் அகல்கின்றன. உலகம் நன்மை பெற அமைதி பெற விசுவநாதர் துணை நிற்பார்.



## கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள் அறிமுகம் – 2

# தத்துவராயர் இயற்றிய சசிவன்ன போதம் – 2

## தத்வமசி





- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

வேதாந்தத்தின் அடிப்படை வாசகம் ''தத்வமசி'' என்பதாகும். இதன்பொருளைத் தெளிவாக சசி வன்னபோதம் குருமுகமாக விளக்குகிறது. தத்வமசி என்பதைத் ''தத்'' என்றும் ''த்வம்'' என்றும் ''மசி'' என்றும் மூன்றாகப் பிரித்து அவற்றின் பொருளை உணர வேண்டும். ''த்த'' என்பது ''நிமலம் ஆம் பரம் '' ஆகும். அதாவது களங்கமற்ற நிர்மலமான ஈசுவரன் என்பதே ''தத்'' என்பதன் பொருளாகும். ''த்வம்'' என்பது

சீவனைக் குறிப்பதாகும். ''அசி'' என்பதன் பொருள் இருக்கின்றாய் என்பதாகும். அதாவது களங்கமற்ற ஈசுவரனம், சீவனும் ஒன்றே ஆக முடியும். ஒன்றே தான் என்பதை உணர்த்துவது ''தத்துவமசி '' என்ற வேதவாக்கியம் ஆகும்.

இந்த வாசகத்தின் உள் பொருளை அறிய பல கேள்விகள் எழலாம். காண்பதற்கு அருமை நிலை உடையது பிரம்மம். சீவன் எளிதில் காணக்கூடியது. இவை இரண்டும் எவ்வாறு ஒன்றாக முடியும் என்று சசி வண்ணன் தன் குருவிடம் வினவுகிறான். இந்த வினாவிற்கு சீவன் என்பது என்ன, ஈசன் என்பவர் யார் என்பதற்கான விளக்கங்களை முதலில் குரு தருகிறார்.

## ஈச இயல்பும் சீவ இயல்பும்

சீவன் என்பது என்ன? கபம், வாதம், பித்தம் இவற்றால் ஆன உடம்பினை உடையது சீவன்.

பரமாத்மா என்ற பிரம்மத்தின் தன்மைகள் என்ன என்பதற்குப் பதில் பின்வரும் பாடலில் அமைகின்றது.

'' ஈசன் முற்று அறிவான் வியாபி

எவைக்கும் ஏது இயம்பும்

ஆகாசகன் நிருபாதி பாவனை

காரண ஆதிகள் ஆவதே'' (69)

ஈசன் ஈசப்பதம் பெற்றவன் (எல்லாருக்கும் மேலானவன்), முழுவதும் அறிவான், எங்கும் நிறைந்தவன், எல்லாவற்றிற்கும் அவனே காரணம் ஆனவன், எல்லாவற்றையும் படைப்பவன், அனைத்தையும் காப்பவன், அனைத்தையும் அழிப்பவன் என்று எழு நிலைகளில் ஈசனின் தன்மையைக் குரு எடுத்துரைக்கிறார். இவற்றுக்கும் மேலாம் தன்மைகளை ஈசன் பெற்றிருப்பினும் இவ்வேழும் இன்றியமையாதனவாகும்.

''தத்'' என்ற பிரம்மத்தின் அசுத்தமும் (சீவத் தன்மையும்), தூய்மையும் (பிரம்மத் தன்மையும்)

'தத்' என்ற பிரம்மம் கடவுள் தன்மை உடையது என்றாலும் அதற்கும் அசுத்தம், சுத்தம் ஆகிய இருதன்மைகள் உண்டு என்று உரைக்கிறார் குரு.

இறைவனுக்கு உள்ள ஏழு தன்மைகளுடன் கூடியிருக்கும் அறிவு மாசு அதாவது அசுத்தம் உடையதாகும். இந்த ஏழு நிலைகளுக்கும் சான்றாக உள்ள அறிவு வடிவம் இறைவன் என்ற நிலைப்பாடு பிரம்மத்தின் தூய்மை நிலையாகும்.

''த்வம்'' என்ற சீவனில் உள்ள

சீவத் தன்மைகளும் (அசுத்தங்களும்) பிரம்மத் தன்மைகளும். (தூய்மையும்)

''த்வம்'' என்பது சீவனைக் குறிக்கும். இச்சீவன் குற்றங்கள் பல உடையது. இதனுள் தூய்மையும் உள்ளது. அசுத்தங்கள் நீங்கி சுத்தநிலை வரும்பொழுது சீவனும் ஈசனும் ஒன்றாம் நிலை கிட்டும்.

சீவனில் உள்ள அசுத்தங்கள் உடல், புலன்கள், உயிர், மனம்,புத்தி , சித்து, அகங்காரம் என்பனவாகும். இவை சீவனை அழுக்காக்குகின்றன. இவற்றால் ஏற்படும் துக்கம் கடந்த அறிவு நிலையே சீவனின் சுத்த நிலையாகும். நான் ஏழிற்கும் சான்றாக உள்ளேன் என்பதே சுத்தநிலையாகும்.

### அசி என்பதன் பொருள்

''செறிந்த காரண காரியங்கள் சிதைந்து மேல் உறு சித்ததாய்

அறிந்த வாதனை தானும் அற்றது அவ் அசபதப்பொருள் ஆவதே ''

என்று அசி என்ற பதத்திற்கான பொருளை விளக்குகிறார் குரு.

அதாவது சீவனுக்கு உரிய காரணச் சப்த உபாதிகள் (ஏழு உடல் மனம் சார்ந்த உறுப்புகள் ) காரியச் சப்த உபாதிகள் (எல்லாவற்றுக்கும் மேலான தன்மை போன்றன) ஆகியன முறையே சீவன், இறைவன் ஆகிய இரு புறத்திலும் நாசமடைந்து அதாவது கடந்து நின்று பின்பு எஞ்சியுள்ள அறிவு நிலையில் சீவனும் இறைவனும் ஒன்றாகம் நிலை கிட்டும். சீவனும் இறைவனும் ஒன்றாக இருத்தல் என்பதே அசி என்பதன் பொருள்.

தத்வமசி என்ற சொற்களைப் பிரித்து அவற்றிற்குத் தெளிவுபட பொருளை நந்தி பராயணர் சொல்லி விளக்கினார்.

### சீவனின் நனவு, கனவு, சுழுத்தி, துரிய நிலை

சீவன் பிரம்மத்துடன் கலக்கச் சில படிநிலைகள் உண்டு. முதல்நிலை விழிப்பு நிலை என்பதாகம். புலன்கள், மனம் , புத்தி, சித்து, அகங்காரம் ஆகியன உடலின் தத்தம் இடங்களில் இருந்துச் செயல்படும் நிலை விழிப்பு நிலையாகும். அதாவது சீவனின் சாதாரண வாழ்க்கை நிலை இதுவாகும். இதனை நனவு என்று குறிப்பிடலாம்.

புலன்கள் முதலியன செயல்படாமல் மனம் மட்டும் செயல்படும்நிலை கனவுநிலையாகும். சீவன்களின் உறக்கத்தின்போது புலன்கள் செயல்படாது, மனம் மட்டும் செயல்படும். அதாவது

சீவன்கள் கனவு காண்கையில் கனவில் தெரியும் காட்சியால் மனம் மட்டுமே இயங்கும். மற்ற புலன்கள் எதுவும் இயங்காது.

இதற்கு அடுத்த நிலை ஆழ்ந்த உறக்கம் போன்ற துரிய நிலை . இது ஏறக்குறைய மரணம் போன்ற நிலையாகும். மனமும் அடங்கும் ஆழ்ந்தநிலை இதுவாகும்.

ஆழ்ந்து அடங்கிய நிலையில் ஞானவடிவம் தோன்றும்.. இந்நிலை துரியம் எனப்படும். இந்நிலையே பிரம்மத்தோடு இயையும் நிலையாகும்.

**பிரம்மத்தின் நனவு, கனவு, சுழுத்தி, துரிய நிலை**

சீவனுக்கு நனவு, கனவு போன்ற நிலைகள் இருப்பதைப் போலவே பிரம்மத்திற்கும் நான்குநிலைகள் உண்டு. சீவனின் துரிய நிலையில் காணப்படும் பிரம்மத்தின் வடிவம் பிரம்மத்தின் விழிப்பு நிலையாகும்.

பிரம்மத்தின் கனவு நிலை என்பது பிரபஞ்சப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் தானே சாட்சி என்ற நிலையிலிருந்து உயர்ந்து, அறிவாகத் தன்னை உயர்த்தி நிற்கும் நிலை பிரம்மத்தின் கனவு நிலையாகும்.

இதற்கும் மேம்பட்ட ''போன நிலை'' ஈசுவரனுக்குச் சுழுத்தி நிலையாகும். உணர்ச்சி, உணர்வோன் இரண்டுமே அற்ற நிலை ஈசனுக்கு பிரம்மத்துக்குச் சுழுத்தி நிலையாகும்.

இந்த மூன்றையும் கடந்த அறிவு நிலை ஈசனுக்கான துரிய நிலையாகும். எல்லாம் ஒடுங்கிய நிலையில் தெரியும் ஞானம் போதம் ஆகிய இந்நிலையில்தான் சீவனும் இறைவனும் ஒன்றாகி நிற்கும் நிலையாகும். இதுவே 'அஸி' என்னும் நிலையாகும்.

இரண்டு அற்ற நிலை, ஏகத்துவம் என்ற நிலை இப்போது கிடைக்கின்றது. இதுவே 'தத் த்வம் அஸி ' நிலையாகும்.

மனம் ஒடுங்கினால் எங்கும் பிரம்ம வடிவம் தோன்றும். மனதின் உள்ளும் பிரம்மம், மனதின் வெளியும் பிரம்மம் என்ற உணர்வு தோன்றும். பிரம்மத்தை அறிந்துவிட்ட சீவன் அதிலேயே கரைந்து சீவன் ஈசுவரன் என்ற வேறுபாடு இல்லாமல் ஒன்றாகிவிடும்.

சசிவண்ணன் இவற்றை உணர்ந்து, செயல்பட்டு குருவருளால் சீவன் முத்தராம் நிலை பெற்றான். மேலும் குருவின் பாதம் போற்றி அவரின் திருவடித் தீட்சை பெற்று குருவிற்கான பணிகள் செய்து உயர் ஞானம் பெற்று மேல் உலகம் அடைந்தான்.



## தத்துவராயர் சமாதி

காட்சி யாவையும் கண்ணது ஆய் அக்கணும் கரைந்த
மாட்சி ஆகிய ஆகோசரம் உறக்கமாய் மதித்தேன்

என்பது கண்ணில் காணும் பொருள் எல்லாம் அவற்றின் பெயர் வடிவம் மறந்து அந்த வாசனையும் இல்லாமல் அனைத்தையும் பிரம்ம வடிவமாகக் காணும் நிலையே பிரம்மத்தை உணரும் நிலையாகும். இந்நிலையை அடைந்த சசி வன்னன் மேல் நிலை பெற்றான். சசி வண்ணனின் கீழ் நிலையைப் போக்க அவன் குருவருள் நாடினான்,பெற்றான், உயர்ந்தான் என்பதனை சசி வன்னபோதம் சாட்சியாக நின்று விளக்குகிறது.



# நல்வழி பாடல்கள்

பாடல் 31

இழுக்குடைய பாட்டிற்(கு) இசைநன்று(;) சாலும்

ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று – வழுக்குடைய

வீரத்தின் நன்று விடாநோய்(;) பழிக்கஞ்சாத்

தாரத்தின் நன்று தனி

**விளக்கம்:**

இலக்கண பிழை உடைய பாட்டு எழுதுவதை விட, உரைநடை நல்லது.

உயர் குலத்தில் பிறந்து ஒழுக்கம் தவறுவதை விட உயிரை விடுவது நன்று, திறமையில்லாத வீரத்தில் போர் களம் சென்று புறமுதுகிட்டு ஓடி உயிரை விடுவதை விட தீராத வியாதியினால் உயிர் போவது நல்லது. தவறு செய்தால் பழிநேருமே என்று அஞ்சாமல் தவறு செய்யும் பெண்ணுடன் வாழ்வதை விட தனியாக வாழ்வது நல்லது. இலக்கணப் பிழையுடைய பாட்டும், நல்லொழுக்க மில்லாத உயர்குலமும், தவறுதலடையும் வீரமும், கற்பில்லாத மனைவியோடு கூடிய இல்வாழ்க்கையும் தீரா வசையை விளைவிக்கும்

சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 14

## அப்பர் வளர்த்த அறம்





**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

திருநாவுக்கரசர் ஒரு விந்தை மனிதர். இறைவனோடு பொருந்திப் பத்திமையால் உருகிப் போற்றி ஆற்றவேண்டிய தொண்டர் கடமைகளைப் பட்டியலிட்டுச் சொல்லித் தந்ததோடு நின்றுவிடவில்லை அவர். தொண்டர் நாள்தோறும் நாடித் தொழும் இறைவனுக்குரிய பொறுப்புகளையும் தெளிவாக வகுத்தார்.

"நான்சட்ட வும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே;
மெய்யிற் கையொடுகால் குலைந்தோ விக்கி யஞ்செழுத்தும் ஓத்தொழிந்தோ நமன்றமர்தம் கோட்பட்டோ பிறவிச்



**சுழிப்பட்டோ நும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே,"**

என்றெல்லாம் பேசத் தொண்டில் சிறந்த அவரால் மட்டுமே முடியும்.

சிலவேளைகளில் அவர் சிவனாருக்குக் கட்டளையுமிட்டார். கூற்றுவனுடைய ஏவலர் தம்மைத் தள்ளுவதன் முன்

இம்மையுன் றாளென்றன் னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில்

**அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார் ?**

"இம்மை வாழ்விலேயே உன் திருவடிகளை என் நெஞ்சில் அழுந்த எழுதி வை. இல்லையெனில், மறுமை யிலே நீ எனக்கு அருளுவாய் என்பதை யாரறிவார்?," என்று உறுதிபட வேண்டினார்.

இந்த மாறுபட்ட பத்திமை வெளிப்பாடுதான் அவருடைய அறிவுசார் பத்திமையையும் சங்கச் சாயலோடு கூடிய நெஞ்சோடு கிளத்தலையும் நமக்குணர்த்தியது. தமிழர் பண்பாட்டை மரபெனும் தொடரோட்டக் கோல்கொண்டு அடுத்த காலக்கட்டத்துக்குக் கடத்திய போற்றத்தகுந்தோருள்

முதன்மையானவர் அப்பர். அப்படி, அவர் நடத்திய மற்றுமொரு மரபுசார்

பாடமே 'அறத்தைப் போற்றல்'.

அவர் கையிலேந்திய உழவாரக் கருவி, அறம் பயிற்றுவிக்கும் ஆசானின் கோலென எண்ணுமளவிற்கு அறத்தைப் பயிற்றுவித்தார் அவர். இங்கு, அறம் போற்றும் அப்பர் பாடல்களை நோக்கும் முன்னர், காலங்காலமாகத் தமிழர் அறத்தைப் போற்றிய திறத்தைத் தொட்டுச் செல்வது இன்றியமையாததாகிறது.

## தமிழர் போற்றிய அறம்

உலகச் சமூகங்கள் அனைத்தும் தம் இனத்தோருக்கு விதிக்கும் நன்னெறிக் கோட்பாடுகளே அறம் எனலாம். அறம் என்னும் மிகப்பெரியதொரு குடைநிழற்கீழ் நிற்கும் பண்புகள் எண்ணிலடங்காதவை. உலகின் மூத்த நாகரிகங்களுள் ஒன்றான தமிழர் நாகரிகம் பண்டைநாள் தொட்டே அறம் குறித்த தெளிவான நெறிகளை அறிவுறுத்திக்கொண்டே இருந்தமையைத் தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

அறத்தின்வழி நின்று பொருளீட்டிப் பெறும் இன்பமே நிலையானதென்பதே, ‘அறம் பொருள் இன்பம்’ எனும் தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் கோட்பாடு.

‘சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல (புறம் 31)’,

என்று அறமே முதன்மை நிலையில் வைக்கப்பட்டது. பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழர் சிறுகச் சிறுகப் போற்றிப் பேணிய முத்துக்களான அறநெறிக் கருத்துகளைச் சங்ககாலம், அகம்புறமென்று தனித்தனிப் பேழைகளில் வைத்துப் பாதுகாத்தது.

அகத்திணையை நோக்கின் ஒருவர்பால் கொண்ட அன்பை மற்றொருவர் மதித்தலும், அன்பு பாராட்டலும், பிள்ளைகளின் காதல் உள்ளங்களைப் பெற்றோர் ஏற்றலும், தலைவன் குடும்பத்துக்காய்ப் பொருளீட்டச் செல்வதும் அறமென்றே வழங்கப்பட்டன. கருத்தொருமித்த தலைவியையும் தலைவனையும் களவு நீங்கிக் கற்பு வாழ்வில் ஈடுபடுத்த தோழி செவிலித்தாய்க்கும், அவள் நற்றாய்க்கும், நற்றாய் தந்தை தமையன்மாருக்குமென, பெண்மனதின் உண்மை நிலையை எடுத்துரைத்ததை ‘அறத்தொடு நிற்றல்’ என்ற தனித்ததொரு துறையாக இலக்கணம் வகுத்தனர் கற்றறிந்தோர்.

ஒரு பெண்ணை ஏமாற்றிய ஆடவன் ‘அறனிலாளன்’ என்று குறிக்கப்பட்டு, அத்தகையவனை ஊரார் மரத்திலே கட்டிவைத்துத் தலையில் சாம்பலைக் கொட்டித் தண்டித்தனர் (அகம் 256). ‘வாக்குத் தவறாமை’ காதல் தலைவனுக்குரிய அறப்பண்பாகக் கொள்ளப்பட்டதை,

“குன்றுஅகல் நல்நாடன் வாய்மையில் பொய் தோன்றின், திங்களுள் தீத் தோன்றியற்று,”

எனும் கலித்தொகைத் தோழி கூற்றின்வழி அறியமுடியும்.

புறத்திணையிலோ நீதி வழுவாமை, குற்றங்களைதல், அரசியல் பிழையாமை, நல்வினையாற்றல், ஈகை, வாய்மை என்ற பல்வேறு நிலைகளில் அறம் மேலும் விரித்துரைக்கப்பட்டது.

மக்களுக்கு நீதி வழங்கிய அறங்கூறு அவையம், பகையோ மகிழ்வோ காட்டாமல் சீர்தூக்கும் கோல்போல நடுநிலையோடு அச்சமும் அவலமும் உளைச்சலும் நீக்கி அறத்தை நிலைநாட்டியது (மதுரைக் காஞ்சி 489 ரூ 492). ‘அல்லது கடிந்த அறம் புரி செங்கோல்’ என்று பெரும்பாணாற்றுப்படை நல்லதல்லாத அனைத்தையும் அறத்தின் எதிர்ப்பக்கத்தில் வைக்கக் காணலாம்.

யானை, குதிரை, நெடிய கொடியுடைத் தேர், காலாட்படை என்ற நான்கு படைகளுடன் புகழுடன் விளங்கினாலும் ‘அறநெறி முதற்றே அரசின் கொற்றம்’ என்று மதுரை மருதன் இளநாகனார் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு அறுவுறுத்தினார் (புறம் 55). அதன் தொடர்ச்சியே இளங்கோவடிகளின் ‘அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்’ எனும் நெறி.

அனைத்திற்கும் மேலாக, இம்மையில் செய்த அறம் மறுமை நலனுக்கெனும் கோட்பாட்டைத் தகர்த்தெறியவும் புலவர்கள் பாடினர். கடையேழு வள்ளல்களுள் ஒருவரான ஆய் அண்டிரன், தான் செய்த ஈகைப் பயன்கள் மறுமைக்காக என்றெண்ணும்

அறவிலை வணிகன்' அல்லன் என்று குறித்தது புறம் (141).

இப்படி, சமயம் சாரா அறப்பார்வையைச் சங்கப் பாடல்கள் காட்டினாலும், பத்திமை வகுத்த வினைப்பயன் கோட்பாடு மெள்ள மெள்ளப் பரவி வந்ததையும் இறுதிக்கட்ட இலக்கியங்கள் காட்டுகின்றன. 'துணை அழத் தொக்கு உயிர் வெளவுங் காலைஞ். வித்தும் அறவினையன்றே விழுத்துணை' உற்றவரெல்லாம் அழ, கூற்றுவன் உயிரை எடுத்துக்கொள்ளும் நேரம், நாம் செய்த அறவினைகளே இக்கரையிலிருந்து அக்கரையான அடுத்த உலகிற்கு நம்மை அழைத்துச் செல்லும் கட்டுமரம் என்றார் பிரமனார் எனும் புலவர் (புறம் 357).

அறத்தைப் போற்றும் புதிய பரிமாணத்தைப் பரிபாடல் வரிகள் காட்டுகின்றன. திருமாலை,

'தீயினுள் தெறல் நீ! பூவினுள் நாற்றம் நீ! கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ! அறத்தினுள் அன்பு நீ!

' என்றார் கடுவன் இளவெயினனார். அடுத்த வரிகளில், மூவேழுலகையும்

'அருள் குடை ஆக அறம் கோல் ஆக'

அவர் ஆள்வது போற்றப்பட்டது (பரி.3). செவ்வேளிடம் புலவர் வேண்டியது பொருளும், பொன்னும், போகமும் அல்ல, அருளும் அன்பும் அறனுமே (பரி.5).

சங்கம் மருவிய காலத்தில் இயற்றப்பட்ட வள்ளுவம் உள்ளிட்ட பதினென் கீழ்க்கணக்கு நூல்கள் அறநெறியையே மூச்சுக்காற்றாகக் கொண்டு உயிரூட்டப்பட்டவை. வள்ளுவம், சங்கம் போற்றிய அறத்தை மேலும் தெளிவுபட அடுக்கி, செம்மையுறச் செறிவூட்டித் தந்தது. வள்ளுவரின் தெளிவு, இன்று வரையும் சமூகத்தில் ஒளியூட்டி வருவதைக் காணலாம்.

'அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து தீதின்றி வந்த பொருள்,'

என்றுரைத்த வள்ளுவர், 'அறன்வலியுறுத்தல்' என்று தனியாக ஓரதிகாரமும்

வைத்தார். அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை எனவும் மனத்துக்கண் மாசிலன் ஆதலே அனைத்தறன்களிலும் சிறந்தது என்றுமுரைத்தார். அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை என்றும் வலியுறுத்தினார்.

'ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை நோற்பாரின் நோன்மை உடைத்து,'

மற்றவரையும் அறநெறியில் ஒழுகச்செய்து தானும்அறம் தவறாமல் நடத்தும் இல்வாழ்க்கை, துறவிகளின் நோன்பைக் காட்டிலும் வலிமையுடையதாம். இக்குறள், தொல்காப்பியத்தோடு ஒப்புநோக்கற்குரியது.

இல்லற வாழ்வில் இன்புற்றுப் பிள்ளைகள் பெற்று அவர்களை நெறிப்படுத்தியபின், மூப்படைந்த காலத்தில் செய்ய வேண்டியவையெனத் தொல்காப்பியம் இயம்புவது

காமம் சான்ற கடைக்கோள் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே
(தொல்.கற்பியல் 51)

களவுக் காலத்தும் மணம் முடிந்த இல்லறக் காலத்தும் துணைநின்ற 'அறம்', வயதாகி உடல் தளர்ந்து

மனம் முதிர்ச்சி பெற்றுக் கணவனும் மனைவியும் தங்கள் பொறுப்புகளைப் பிள்ளைகளிடம் ஒப்படைக்கும்போது, தந்து செல்லவேண்டிய இன்றியமையாச் சொத்தாகக் கருதப்பட்டது என்பதையுணர்த்தும் நூற்பா இது.

இப்படித்தான் காலங்காலமாக அறம் போற்றப்பட்டது தமிழகத்தில். அதனால்தான், இறைப்பற்றே முதன்மையுணர்வாகத் தழைத்த பத்திமைக் காலத்திலும், அறம் வழுவாத சமூக நெறியை நாயன்மார் வற்புறுத்திக் கொண்டேயிருந்தனர். அதிலும், நாவுக்கரசரெனும் அறங்காவலர் அறவழியைப் பேணச்சொல்லிப் பாடம் நடத்தியதுபோல் வேறொருவர் செய்திலர். பண்டைத் தமிழர் வலியுறுத்திய அறத்தைப் புரிந்துகொள்ளாமல், அப்பர் வளர்த்த அறநெறிகளை வியத்தல் முழுமையாயிராது என்பதாலேயே இத்தகு முன்னுரை தேவைப்பட்டது.

சங்கமும் வள்ளுவமும் அறமெனும் பெட்டகத்துள் பேணித்தந்த நற்பண்புகளை இறையன்பால் பட்டைத் தீட்டி மிளிரச் செய்து, பத்திமையென்னும் பொன்னால் செய்த சங்கிலியில் கோத்தளித்த நெறியாளர் நாவுக்கரசர். குறிப்பாக, இறைவனையடையும் வழிகளுள் அறத்தை முன்னிறுத்தியவர், அறம் பேணுவதற்கு இறைவனை நாடல் சிறந்த வழியெனவும் மொழிந்தது அறத்தின்பால் அப்பர் கொண்ட பற்றை உணர்த்தும்.

### அப்பர் போற்றிய அறம்

அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்

திறந்தெரிந்து தேறப் படும் (குறள் 501)

அறவழிகளால் பொருள் தேடி அறநெறிக்கொவ்வாத இன்பத்தில் மயங்காமல் உயிர்க்கஞ்சாதவனையே ஆய்ந்தறிந்து பணியிலமர்த்த வேண்டுமென்றது வள்ளுவம். நாவுக்கரசரோ தொண்டராய்த் திகழும் தகுதியை இதே வழியில்எடுத்துரைத்தார்.

வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்

சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்

மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்

அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே

(04.094.05)

தேடுதலுக்குரிய சிறந்த பொருள் சிவனேயென்றும், அப்பொருளை மனத்தடைத்து வைப்பதால் கிடைக்கும் இன்பம் இறையருளென்றும் மொழிந்தார். ஆனால் சிவனெனும் பொருள் கிட்டிட, அடிப்படையாம் அறத்தைப் போற்றலின்றி வேறு வழியில்லையென்று பதிகந்தோறும் உறுதிபட வலியுறுத்தினார் அவர்.

அறத்தால் பெற்ற பொருளாம் இறைவனும், கிட்டிய பேரின்பமாம் இறையருளும் எய்தியபின் உயிரச்சம் என்பதேது? அதனால்தான்,

'அஞ்சுவது யாதொன்றும் இல்லை' என்றும் 'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்றும் 'விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா னினிநமக்கிங் கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம் (04.094.03)

என்றும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார் அவர்.



'அறத்தானை அறவோனை', 'அறத்தாய் அமுதீந்தாய் நீயே' என்றெல்லாம் இறைவனே அறவடிவானவன் என்று போற்றுகையில் அறத்தைப் பொதுச்சொல்லாகப் பயன்படுத்திய அப்பர், அறமெனும் பெருங்குடைக்கீழ் பல்வேறு பண்புகளைப் பட்டியலிட்டார். இறையருள் வேண்டும் அன்பர்களுக்கான தொண்டுப் பட்டியலைவிட அவர் வலியுறுத்திய அறங்களின் பட்டியல் நீண்டது.

எத்தகைய அடியார் நெஞ்சினுள் திருக்கன்றாப்பூர் இறைவனைக் காணலாம் என்று கூறும் பாடலிது

இலங்காலஞ் செல்லாநா ளென்று நெஞ்சத்

திடையாதே யாவர்க்கும் பிச்சை யிட்டு

விலங்காதே நெறிநின்றங் கறிவே மிக்கு

மெய்யன்பு புகப்பெய்து பொய்யை நீக்கி

கலங்காதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே

கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே (06.061.04)

தளர்வுறா மனத்தோடு

1. யாவர்க்கும் பிச்சையிடல்
2. நெறியோடு நிற்றல்
3. அறிவு மிகுதல்
4. மெய்யன்பு கொள்ளல்
5. பொய்நீக்கல்

என்று ஒரே பாடலில், அறத்தின் வழிப்படும் நற்பண்புகள் பலவற்றைச் சுட்டினார் அப்பர்.

'யாவர்க்கும் பிச்சையிடல்' எனுமிடத்து, 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாந் தலை', என்ற வள்ளுவர் வாக்கை நினைவுகூறல் வேண்டும். ஆறாம் திருமுறையின் பொதுப்பதிகத்திலும்,

குலம்பொல்லேன் குணம்பொல்லேன்' எனத் தொடங்கி குற்றமே பெரிதுடையேன், நல்லாரோ டிசைந்திலேன், வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன், இரப்பதே ஈய மாட்டேன் (06.095.09) என்று புலம்பினார்.

குற்றங்களைந்து, கடுஞ்சொல் தவிர்த்து, பயனில சொல்லாது, நல்லோர் நட்பு

கொண்டு, அனைவருக்கும் ஈந்துதவும் அறங்களை மனதில் பதியவைத்தார். வெறுப்பன பேசியதைத் தவிர்க்கச் சொன்ன அப்பரைப் போன்றே ஆண்டாளும் 'தீக்குறளைச் சென்றோதோம்' என்று பாடியமை,

அக்காலச்

சமூகம் இறைவழிபாட்டோடு நன்னடத்தைக்குக் கொடுத்த சிறப்பிடத்தைக் காட்டும்.

வெறுப்பன பேசுவதை ஏன் அப்பர் மறுத்தார்? இன்னாச்சொல் பேசியவர் பேசிச் செல்லலாம்; அச்சொல்லைக் கேட்டவர் நிலையென்ன? 'உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும் இன்னாச்சொல் நோற்பாரின் பின்,'

பிறர்கூறும் கொடுஞ்சொற்களைப் பொறுப்பது உண்ணா நோன்பிருப்பதைக் காட்டிலும் சிறப்புடையது என்று வள்ளுவர் குறிப்பிட்டதை அப்பர் மிகவுணர்ந்து அங்ஙனம் சொன்னார்போலும்.

அதனால்தான் வெறுப்பன பேசவேண்டாம் என்றவர் கூடுதலாக, பொய்ப் பேசாதிருக்கவும் வாய்மைப் பேணவும் பரிந்துரைத்தார்.

'பொக்கம் பேசிப் பொழுது கழியாதே துக்கந் தீரும் வழி நக்கன் சேர்நல்லம் நண்ணுதலே' (05.043.02)

என மொழிந்தார்.

செல்வத்தைத் தேடி மகிழ்ந்து 'பொய்யெலாம் பேசிடு நாணிலீர்' (05.084.02)

என்று பொய்ப் பேசியோரைச் சாடினார்.

இறைவனோ, '

பொய்யனைத்தையும் விட்டவர் புந்தியுள் மெய்யன்' (05.048.09); 'பொய்யர்மனம் விரவா தான்' (06.087.07)

என்று மேலும் பொய்யை ஒதுக்கி மெய்யை விதைத்தார். 'பொய்மிகுத்த வாயராய்ப் பொறாமையோடு சொல்லுநீர்ஞ்.பைமிகுத்த பாம்பரைப் பரமர்காழி சேர்மினே' என்று சம்பந்தரும் பொய்யொடு பொறாமையும் தவிர்க்கப் பாடியது நோக்கத்தக்கது.

'புறத்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையால் காணப் படும்' என்பதையே நாவுக்கரசர், 'வாய்மையால் தூயேனல்லேன்' (04.054.07) என்றார். திருவாரூர் அமர்ந்த எம்மான், 'பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க் கருள்செய்பவன்' (04.004.10) என உறுதிபடக் கூறினார்.

## ஆர்வம் செற்றம் குரோதம்

அப்பரை மனத்தளவில் பெரிதும் தாக்கியவை ஆர்வம்செற்றம்குரோதம் எனும் பேராசையும் கடுஞ்சினமும் பகையுணர்வும். இம்மூன்றும் இணைந்தே ஐந்துமுறை குறிப்பிடப்படுவதைக் காணமுடிகிறது.

ஆர்வம்செற்றம்குரோதம் நீக்கலே அறம் புரிந்த மனதின் தகுதிகளென்றார். பிறந்து பிணிவசப்படும் பிறப்பை வெறுத்து, 'அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச்செற்றக் குரோத நீக்கி' இறைவனையே நாடியதைத் திருவாரூர்ப் பதிகம் விளம்புகிறது (04.020.08). 'அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்' என்ற வள்ளுவர் வாக்கு இங்கு ஒப்புநோக்கற்பாலது. அவா வெகுளி என்ற வள்ளுவரின் சொல்லாடலை அப்பர் ஆர்வம் செற்றமெனக் கொண்டார்.

தவறிழைத்த இராவணனை முதலில் தண்டித்துப் பின் உகந்தருள் செய்த ஒற்றியூர்ப் பிரான், ஆர்வம் செற்றம் குரோதத்தை நாம் அழித்தால் நமக்கும் அருள் புரிவாரென்றும் (04.045.10) 'ஆர்வச் செற்றங்கள் குரோத நீக்கில் சீலமும் நோன்பு மாவார் திருச்செம்பொன்

பள்ளியாரென்றும்' (04.029.06) அக்கோயில் பதிகங்களில் முழங்கினார். இதே திருச்செம்பொன்பள்ளிப் பாடலில் கள்ளத்தையொழிக்கவும் பொய்க்கோலம் பூணாதிருக்கவும் மேலும் ஊக்கினார். இவற்றைக் கடைப்பிடிக்க இறைவன் ஒழுக்கமும் நோன்புமாவார் எனுமிடத்தில் ஒழுக்கத்தையும் ஓம்பச் சொன்னமை புரியும்.

ஆர்வம் செற்றம் குரோதத்தை நீக்குங்கள் என்று மக்களிடையே முழங்கிய அப்பர், அடுத்த நிலையில் அத்தீய பண்புகளிடமே அழுத்தமாகப் பேசியாகிலும் நேர்மறையாக மக்கள் மனங்களை மாற்ற முற்பட்டார்.

'பொங்குமதமே(செருக்கே), மானமே, ஆர்வச் செற்றக் குரோதமே, உலோபமே

செங்கனகத் தனிக்குன்றான ஆரூர்ச்செல்வனைச் சேர்ந்திட்ட என்னை உங்களால் ஒன்றும் செய்யமுடியாது', என்பதே திருவாரூர்ப் பதிகப் பாடலின் சாரம் (06.027.06). கூடுதலாக, 'ஆரூரில் அம்மானை ஆர்வச்செற்றக்குரோதம் தட்டானை' என்றார் (04.005.09). ஆர்வச் செற்றக் குரோதமாகிய அறமல்லாப் பண்புகள் அணுகாதவர் இறைவரென்று சிவனார்மேல் ஏற்றிவைத்தும், அறம் வளர்க்கப் பாடுபட்டமை அப்பரின் வியக்கவைக்கும் உளப்பாங்கு.

மேற்கூறிய பாடல்களில் அப்பர் குறித்த செருக்கும் சினமும், மாண்பிறந்த மானமும், உலோபமும் வள்ளுவரால் குற்றங்களென்று சாடப்பட்டன. நற்பண்புகள் எய்திநிற்றல் மட்டுமல்லாமல் குற்றங்கள் களைவதும் அறம் புரிந்த வாழ்வென்று கற்பித்தது நாவுக்கரசரின் சமூகநெறி வழுவாத சமயநெறி.

குற்றங்களைதல்

தீயவற்றைக் களைவதுவரை விடாமல் நன்னெறிப் படுத்துவதுதானே அப்பருடைய இயல்பு? 'குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்' (05.065.03) குற்றங்களைப் பெருக்கிக் குணங்களைக் கூட்டாதவர்களே! என்றழைத்தவர், 'மண்ணுளே திரியும்போது வருவன பலவுங் குற்றம்' (04.070.08) என்று மென்மையாகச் சொல்லி அவற்றை நீக்கச் சொன்னார். அடுத்ததாக, குற்றங்கள் நிறைந்திருந்ததால் மனித வாழ்வு அவருக்கு வெறுத்துப் போனதைச் சொன்னார். 'கெடுவதிப் பிறவி சீசீ' என்று உதறியும் தள்ளினார்.

படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை

கெடுவதிப் பிறவி சீசீ கிளரொளிச் சடையி னீரே (04.076.10)

என்று உணர்வுபொங்கியது அவர் வரிகளிலும்.

'குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே', என்று வழிகாட்டியவர், 'கோவடு குற்றந் தீராய் கோடிகா வுடைய கோவே' என்றும் 'குற்றந் தீராய் கொன்றைசேர் சடையி னானே' என்றும் இறைவனை வேண்டினார். இறைவன் எத்தகையவன்? எனக் கேட்டார்க்கு அவன் குற்றமில்லி, மற்றொரு குற்றமிலாதான், குற்றமில் குணத்தினான் என்றார்.

## கூரிய குணத்தார் குறிநின்றவன் இறைவன்

வேறு எந்தெந்த அறப்பண்புகளை வரிசைப்படுத்தினார் அப்பர்? இறைவனை நாடும் வழிகளோடு இறைவன் அடியார்கள் நெஞ்சில் குடியேறவும் நெறிப்படுத்திய பாங்கில் அப்பருக்கு இணை அவரே.

"கடம்பந்துறைச் சென்றடை மின்களே" என்று வெறுமனே சொல்லாது, 'சீரியல் பத்தர்' என்று அடியவர் தகுதியையும் சுட்டினார். இறைவனோ, கூரியகுணத்தார் குறிநின்றவன், கள்ளமில்லாத அடியார் நெஞ்சிற் சேர்ந்தவன், நல்லார்தம் நன்மையறிந்தவன். 'நிறைவிலேன் நேசமில்லேன் நினைவிலேன்' என்று புலம்பி அவற்றை வளர்த்துக் கொள்ளவும் பணித்தார்.

மாண்பிலா நெறிகளையும் தகவிலாத் தொண்டையும் அவர் விரும்பவில்லை. 'மனத்தினார் திகைத்துநாளு மாண்பலா நெறிகண்மேலே கனைப்பரால் என்செய்கேனோ கறையணி கண்டத்தானே–#39; (04.023.08) என்று தில்லையில் வினவினார். 'இறைவன் தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய்,' என்று மழபாடியில் முழங்கினார்.

கரவு என்னும் ஒளிவு மறைவுடைய இயல்பைத் தவிர்க்கச் சொன்னார். சிவனாரை, 'கரவாடும் வன்னெஞ் சர்க் கரியான் கரவார்பால் விரவாடும் பெருமான்' (04.007.01) என்றும்

'கரவிலா மனத்தராகிக் கைதொழுவார்கட்கு ... ஆடி இன்னருள் செய்யும் எந்தை' (04.058.03) என்றும் போற்றினார்.

புறம் பேசலாமா? கூடாதென்றார். 'பேச்சொடு பேச்சுக்கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்கூச்சிலே னாதலாலே கொடுமையை விடுமாறோரேன் (04.078.06) என்று, புறம்பேசக் கூசாத கொடுமையை விவரித்தார்.

உயிர் பொருந்திய பொய்யான உடலை மெய்யென்றெண்ணி வாழ்கின்றீர் என்று ஆன்மீகம் பேசினாலும், அங்கும் அறத்தைக் குறிப்பிட்டதே அப்பர் நெறி 'பொருத்திய குரம்பை தன்னுட் பொய்ந்நடை செலுத்துகின்றீர் ஒருத்தனை யுணர மாட்டீர் உள்ளத்திற் கொடுமை நீக்கீர்' (04.031.03), என்று உள்ளத் திலிருந்து கொடிய எண்ணங்களை விலக்கச் சொன்னார்.

## அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை

இல்வாழ்வுக்கும் பிறவியைப் பிணியென்றுணர்த்தும் பத்திமைக்கும் தொடர்புண்டா? உண்டென்றார் அப்பர். உமையொரு பாகரான சிவபெருமான் மனைவியை மதிப்பவர் என்று காட்ட

'பூந்துருத்தி இறைவன், மாதினை மதித்தான் ஒரு பாகமாக,' எனச் சுவைபடப் பாடினார் (05.032.03).

இறைவனின் புறத்தோற்றங்களான அழகும் மிடுக்கும் சிறப்பியல்புகளான வீரமும் அருளும் பெருந்தன்மையும் பாடப்பட்டதில் வியப்பில்லை. ஆனால், 'மாதினை மதித்த' தன்மையை நாவுக்கரசரின் உள்ளம் நினைந்து போற்றியதை நோக்க, இல்வாழ்வுக்கான அறத்தையும் அவர் உணர்த்தியது புரியும்.

மாதினை மதித்ததைப் புகழ்ந்தவர், 'தில்லையம்பலக் கூத்தனுக்கு ஆட்பட்டிருக்க வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்' என்று வாய்த்த பிறவியை மதிக்குமாறு ஊக்குவித்தார் (04.081.05).

அப்பர், நாவுக்கு அரசர் மட்டுமல்லர் தெளிவான சிந்தனைக்கும் சொந்தக்காரர். மனைவியை மதித்தலையும் பிறவியை மதித்தலையும் புகழ்ந்தவர், மனித உடலை மதிக்கத்

தேவையில்லை என்றார். 'மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மையலெய்தில் விண்ணிடைத் தருமராசன் (எமன்) வேண்டினால் விலக்குவாரார்' (04.031.02) என்று எச்சரித்தார்.

அறமிருக்க மறம்விலைக்குக் கொண்டவாறே பிறந்த பிறவியில் காலந்தாழ்த்தாது 'அறஞ்செய்க' என்றார் வள்ளுவர். 'அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது பொன்றுங்கால் பொன்றாத் துணை' முதுமையில் செய்யலாம் என்றெண்ணாது அப்போதைக்கப்போதே

அறம் செய்க; அதுவே நாம் அழிந்தாலும் தான் அழிவின்றி துணைநிற்குமாம். நாவுக்கரசர் காலந்தாழ்த்தி அறவழிப்பட்டதை எண்ணி மனம் நொந்தார்.

முன்னாளில் வேற்றுச் சமயத்தினரோடு வாழ்ந்த காலத்திற்குப் பின், மனத்திலிருந்த கள்ளத்தைப் போக்கிப் பிணிகாட்டி ஆட்கொண்டு பிணிதீர்த்த ஆரூரர்தம் 'அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம்விலைக்குக் கொண்ட வாறே' (04.005.03) என்றார். அறம், இறைவனை நாடும் வழி மட்டுமல்ல; அறமிருந்தால் இறையருள் கைக்கூடும் என்பதும் நிறைவான செய்தியல்ல; இறைவனைப் பற்றுவதால் கிட்டும் இறைவனுக்கருகே இருக்கப்பெறும் நல்வினைப்பயனும் அறமேயென்று குறித்தார் அவர்.

பிறவியை மதிக்கச் சொன்ன திருமூலரும், மானிடர் ஆம்விதி பெற்ற அருமை வல்லார்க்கே உயர்வு பெறும் வழியென்னவென்று சொன்னார். இவ்வுலகில் மீண்டும் பிறக்கும் நெறியை நாடினால் 'அறஞ்செய்மின்' என்றார் (10. முதல் தந்திரம்8:9).

தமிழர் வாழ்வுநெறியில் இரண்டறக் கலந்துநின்ற அறம் எனும் நற்பண்புத் திறத்தை இறைப்பற்று தளர்த்திடா வண்ணம் அழுந்தச் சொல்லியமை அப்பரின் பெருஞ்சிறப்பு. பத்திமையாளர் இலக்கு இறைவனையடைதல் ஆதலால் நெறிப்படுத்துவோர் இறைவனையே முன்னிறுத்துவர். ஆனால், அப்பரோ தமிழர் பண்பாடு மிகப்பெரிதாகக் கருதிய அறத்தை முன்னிறுத்தினார். பண்டைத் தமிழ்ச் சமூகத்து விழுமியங்களை நிலையாய்ப் பற்றிநின்று பத்திமை வளர்த்தவர் அவர்.

அறத்தைக் கடுமையாகச் சொல்லியாகிலும் உணர்த்த விரும்பி திருநாகேச்சரப் பதிகத்தில், 'அறம்புரியாத் துரிசர் தம்மைத் துறந்தானை' என்று இறைவன் அறம் புரியாக் குற்றமுடையோரைக் கைவிட்டிடுவான் என்று வீறு கொண்டார். கூடுதலாக, 'திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக் கண் சேராதாரே' என்றுமுரைத்தது அறத்தை அப்பர் போற்றிய தன்மையைப் புலப்படுத்தும்.

'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது' என்று வள்ளுவர் இல்வாழ்க்கைக்காய் ஓதிய அன்பையும் அறத்தையும் பத்திமையின் வேர்களாக மட்டுமின்றி பகுத்தறிவின் சாரமாகவும் உணர்ந்து வலியுறுத்தியமை அப்பரெனும் சமூகப் பற்றாளரின் மாபெரும் சாதனைகளுள் தனிச்சிறப்பு வாய்ந்தது எனின் அது மிகையாகாது.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.



# கற்குடிக்கோயில்

பகுதி–2



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

## இரண்டாம் மலைச்சுற்று

கோபுரத்திலிருந்து வெளிப்பட்டதும் கிழக்கிலும் மேற்கிலும் வளரும் இரண்டாம் மலைச்சுற்றில் கோபுரவாயிலுக்கு எதிரிருக்குமாறு கொடிமரம், பலித்தளம், நந்தி ஆகியன உள்ளன. அவற்றின் பின்னே இறைக்கோயில்கள் அமைந்திருக்கும் நான்காம் நிலையின் சுற்றுச் சுவர் நெடுக வளர்ந்து விரிகிறது. 65 மீ. நீள அளவுகோல் ஒன்றும்7 கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ள இச்சுவரை ஒட்டியுள்ள இரண்டு கட்டுமானங்களில் கிழக்கிலுள்ளது திறந்த மண்டபமாக உருளைத்தூண்களும் முச்சதுர இருகட்டுத் தூண்களும் பெற்று வசந்தமண்டபம் என்ற பெயருடன் விளங்க, மேற்கில் உள்ளது ஓர் அறையாகவும் முன்றில் பெற்ற பிள்ளையார் திருமுன்னாகவும் அமைந்துள்ளது. இத்திருமுன்னில் சோழர் காலப் பூதச்சிற்பம் ஒன்றைக் காணமுடிகிறது. இம்மேற்குக் கட்டுமானத்தையடுத்து வளாகத்தின் நான்காம் நிலையை அடையப் பதினாறு படிகள் வளர்கின்றன.

இம்மூன்றாம் நிலையின் வடகிழக்குப் பகுதியில் வளாகத்தின் நான்காம் நிலையில் உள்ள இடர்களைவார் திருமுன்னுக்குச் செல்லும் படிகள் உள்ளன. இப்படிகளை ஒட்டி வலப்புறத்தே பாறைநீட்சியைக் காணமுடிகிறது. படிகளையொட்டி வளரும் சுற்றுச்சுவர் இறைவன் திருமுன் வெளிச்சுற்றை இடைவெளிவிட்டுத் தழுவிய நிலையில் வடமேற்காகத் திரும்பி அச்சுவரின் கீழ்ப்பகுதியோடு இணைகிறது. அதையடுத்துக் காணப்படும் கட்டமைப்பு




சாளரமாக்கப்பட்டுள்ளது. அதன் இருபுறத்தும் பக்கத்திற்கொன்றாகக் கூடுதல் சாளரங்கள். கபோதத்துக்கு மேல் சிறு கைப்பிடிச்சுவர் கொண்ட, மாடக்கோயில் அமைப்பிலான மாடக்கோயில் அமைப்பில் வெறுமையான கீழ்த்தளத்தையும் அதன் மேல், தற்போது நடராஜர் மண்டபமாய் விளங்கும் மேற்றளத்தையும் பெற்றுள்ளது.

### மாடமண்டபங்கள்

துணைத்தளம், நான்முக அரைத்தூண்கள் தழுவிய கோட்டங்கள் கொண்ட சுவர், குளவுப் போதிகைகள் தாங்கும் கூரையுறுப்புகள் பெற்றுள்ள வெற்றுக் கீழ்த்தளம் 56 மீ. உயரம் பெற்றுள்ளது. பாதபந்தத் தாங்குதளம் வேதிகைத் தொகுதி, நான்முக அரைத்தூண்கள் தழுவிய சுவர் கொண்டு, வெட்டுப் போதிகைகளுடன் கூரை தாங்கும் மேற்றளம் 95 மீ. உயரம் பெற்று நடராஜர் மண்டபமாகியுள்ளது. வடக்கிலும் மேற்கிலும் திசைக்கு மூன்று கோட்டங்கள் பெற்றுள்ள இத்தளத்தின் மேற்கில் உள்ள நடுக்கோட்டம் இம்மண்டபத்தைப் பொ. கா. 1021 இல் முதலாம் இராஜேந்திரரின் 10ஆம் ஆட்சியாண்டில், மன்னரின் தோள்வலிமை பெருக, இராமன் அருமொழித்தேவனான உத்தமசோழ பிரம்மமாராயன் வழி விண்ணப்பித்து மன்னரின் இசைவு பெற்ற நிலையில், தாயன் திருப்பராயன் ஆடல்விடங்கபிரான் கட்டமைத்தாரெனக் கல்வெட்டுக் கூறுகிறது.

இப்பதினோராம் நூற்றாண்டு மாடமண்டபத்தை ஒட்டி அதன் தொடர்ச்சியாகப் பின்னாளில் உருவாக்கப்பட்ட மற்றொரு மாடமண்டபம் மேற்கிலும் தெற்கிலும் இருதள அமைப்புடன் காட்சிதருகிறது. இதன் கீழ்த்தளம் நடராஜர் மண்டபத்தின் வெற்றுத்தளம் போல் உறுப்பு வேறுபாடுகள் கொள்ளாது, வெறுஞ்சுவராக வளர்ந்து கபோதம் உள்ளிட்ட கூரையுறுப்புகள் பெற, நடராஜர் மண்டபத்தின் முன்

அமைந்திருக்கும் சிற்பமண்டபமாக உருவாகியுள்ள அதன் மேற்றளம், முதல் பிரிவில் கபோதபந்தத் தாங்குதளமும் மெல்லிய நான்முக அரைத்தூண்கள் அணைத்த சுவரும் கபோதம் உள்ளிட்ட கூரையுறுப்புகளும் கொள்ள, இரண்டாம் பிரிவில் உறுப்பு வேறுபாடற்ற தாங்குதளமும் தூண்களற்ற சுவரும் உள்ளன. இதன் தெற்கு முகத்தின் கீழ்த்தளப்பகுதியில் நெடிய பிடிச் சுவருடனான படிவரிசை. இப்பிடிச்சுவரின் கீழ்ப்புறத்தே தென்பகுதியில் ஒருதள விமானத்தின் சிற்பக்காட்சி. தெற்கு மதில்சுவரில் கோபுரத்திற்கு மேற்கிலிருக்குமாறு நந்தியொன்று இருத்தப்பட்டுள்ளது.

## நான்காம் நிலை

படிவரிசை முடியுமிடத்தில் உள்ள வாயிலொட்டி விரியும் வலபிப்பகுதியில் பாலுணர்வுச் சிற்பங்களைக் காணமுடிகிறது. வாயிலுள் நுழைந்ததும் பன்னிரண்டு தூண்கள் தாங்கும் சிற்ப மண்டபம் வரவேற்கிறது. முச்சதுர, இருகட்டு உடலுடன் பூமொட்டுப் போதிகை பெற்றுக் கூரைதாங்கும் இந்தத் தூண்களின் சதுரங்களைப் பதக்கங்களும் சிற்பங்களும் அழகு செய்கின்றன.

## சிற்பமண்டபம்

மயில்மீது சுகாசன முருகன், குற்றவாளியை யானை இடறல், இராமர், அலங்கார வளைவுடன் பிள்ளையார், இரணியன் நரசிம்மர் போர், கருடர் தாங்கும் விஷ்ணு, தேவி, புலி கொல்லும் வீரர்,9 பிச்சைத்தேவர், மகிடாசுரமர்த்தினி, யோகநரசிம்மர், திருமகள் நிலமகளுடன் விஷ்ணு, வாயிற் காவலர், இறைவன்காளி ஆடல் போட்டி, சிம்மவாகினி, தென்திசைக்கடவுள், பிச்சையிடும் முனிபத்தினி, பானை சுமக்கும் பெண், அர்த்தபத்மாசனப் பெண், அன்னம், ஊரக ஆடலர், பெண்ணின் ஊர்த்வதாண்டவம், பன்றிகள், கத்தி, கேடயத்துடன் வீரர் எனச் சமயம், சமூகம் இரண்டையும் படம் பிடிக்கும் வகையிலான பல சிற்பங்கள் இம்மண்டபத் தூண் சதுரங்களை அலங்கரிக்கின்றன.

மண்டபத்தின் கிழக்கில் உயரும் துணைத்தளம் நான்கு தூண்களுடன் மைவிழியாள் (அஞ்சனாட்சி) திருமுன்னுக்கான வாயில் பெற்றுள்ளது. வடக்கில் வளரும் அகலமான ஐந்து படிகள் வளாகத்தின் ஐந்தாம் நிலையில் உள்ள நடராஜர் மண்டப வாயில்களில் முடிகின்றன. இவ்வாயில்களை ஒட்டியுள்ள சிறு

மேடைப்பகுதி சதுரத்தூண்களும் முச்சதுர இருகட்டுத் தூண்களும் பெற்றுள்ளது. சிற்பமண்டபத்தை எழுப்பிய இரண்டு பெருமக்களும் அம்மன் கோயில் துணைத் தளம் ஒட்டிய மண்டபத் தூண்களின் கீழ்ச்சதுரங்களில் காட்சி தருகின்றனர்.

## மைவிழியாள் திருமுன்

வளாகத்தின் நான்காம் நிலையில் சிற்பமண்டபத்தின் கிழக்கில் அகலமான சுற்றோடு அமைந்துள்ளது மைவிழியாள் திருமுன். சுற்றின் தென்மேற்கு மூலையில் உள்ள ஒருதள நாகர விமானத்தில் பிள்ளையாரும் வடமேற்குப் பகுதியிலுள்ள ஒரு தள நாகரத் திருமுன்னில் வள்ளி, தெய்வானையுடன் முருகனும் உள்ளனர். சுற்றின் வடமேற்கு மூலையில், முருகன் திருமுன்னை அடுத்து வடசுவரை ஒட்டிய நிலையில் காணப்படும் உறுப்பு வேறுபாடற்ற ஒருதள வேசரத் திருமுன்னில் கோயிலின் மற்றோர் அம்மையான பாலாம்பிகை கிழக்குப் பார்வையில் உள்ளார். கருவறை, முகமண்டபம் என உள்ள இத்திருமுன்னின் வடசுவரில் கல்வெட்டுகள் தொடர்வது கொண்டு, இத்திருமுன் பின்னாளில் இணைக்கப்பட்ட தென்பதை



உணரலாம். கருவறையில் பட்டாடையும் சடைமகுடமும் பெற்று மகர, பனையோலைக் குண்டலங்களுடன் காட்சிதரும் பாலாம்பிகையின் பின்கைகள் தாமரை கொள்ள, முன்கைகள் காக்கும், அருட் குறிப்புகளில் உள்ளன.

சுற்றின் தென்கிழக்குப் பகுதியில் வெளிச்சமும் காற்றும் வேண்டிய அளவிற்குப் பெறச் சாளரம் உள்ளது. வடகிழக்குப் பகுதியில் உள்ள திறப்பு மடைப்பள்ளி, நான்காம் நிலையின் வெளிச்சுற்று ஆகியவற்றிற்கு வழிவிட, வடபுறத் திறப்பு வளாகத்

தின் ஐந்தாம் நிலையில் உள்ள விழுமியதேவர் திருமுன்னுக்கு வாயிலாகிறது. அதன் இருபுறத்தும் பேரளவிலான சுதைக் காவலர்கள். மேலுள்ள வலபியின் பூதவரியில் இசைக்கருவிகள் முழங்க இறைவனுக்குப் படையல் எடுத்துச் செல்லும் காட்சியும் கண்ணப்பர் கண்ணகழும் காட்சியும் இடம்பெற்றுள்ளன.

சுற்றின் நடுப்பகுதியில் மேற்குப் பார்வையாக இருதளத் திராவிட விமானமும் முகமண்டபமும் பெற்றிலங்கும் மைவிழியாள் திருமுன் உபானம், பாதபந்தத் தாங்குதளம், சதுரபாதம் கொண்ட எண்முகத் தூண்கள் அணைத்த சுவர், வெட்டுத்தரங்கப்போதிகைகள் தாங்கும் கூரையுறுப்புகள் கொண்டுள்ளது. கருவறைச் சுவரின் முப்புறத்தும் சாலைப் பத்திகளில் காட்டப்பட்டுள்ள கோட்டங்களும் அவற்றின் மேலுள்ள மகர தோரணங்களும் வெறுமையாக உள்ளன. கோட்டங்களைச் சட்டத்தலை பெற்ற உருளை அரைத்தூண்கள் தழுவியுள்ளன. வலபியில் உள்ள பூதவரி முகமண்டபத்தின் தென்மேற்குப் பகுதியில் வடிவம் பெறாது சதுரச் சில்லுகளாகவே விடப்பட்டுள்ளது.



திருமுன்னைச் சுற்றிலும் சற்றே இடைவெளி விட்ட நிலையில் நான்முகத் தூண்கள் வெட்டுப் போதிகைகளுடன் கூரை தாங்க, முகமண்டப வாயிலின் இருபுறத்தும் முச்சதுர, இருகட்டுத் தூண்கள் வெட்டுத்தரங்கப்போதிகைகளுடன் அமைந்துள்ளன. கருவறையின் வடபுறத்தே அமைந்துள்ள சிறிய திருமுன்னில் சண்டேசுவரி வலக்கையில் மழுவேந்தி, இடக்கையில் கடகம் காட்டி சுகாசனத்திலுள்ளார். கருவறையில் பட்டாடை, சடைமகுடம், பனையோலைக் குண்டலங்களுடன்

நின்றகோலத்தில் காட்சிதரும் மைவிழியாளின் பின்கைகள் தாமரையேந்த, முன்கைகள் காக்கும், அருட் குறிப்புகளில் உள்ளன.

## இடர்களைவார் திருமுன்

நான்காம் நிலை வெளிச்சுற்றின் கிழக்கில் மடைப்பள்ளியும் வடகிழக்கில் இடர்களைவார் திருமுன்னும் உள்ளன. மடைப்பள்ளி வாயிலின் இருபுறத்துமுள்ள திண்ணைகளில் வளரும் முச்சதுர இருகட்டுத் தூண்களின் வெட்டுப் போதிகைகள் கூரை தாங்குகின்றன. ஒரு தள நாகர விமானமும் சிறிய முகமண்டபமும் கொண்டுள்ள இடர்களைவார் திருமுன்னின் விமானம் பாதபந்தத் தாங்குதளம், வேதிகைத்தொகுதி, எண்முக அரைத்தூண்கள் தழுவிய சுவர், வெட்டுத் தரங்கப் போதிகைகள் தாங்கும் கூரையுறுப்புகள் பெற்றுள்ளது. சுவர்க் கோட்டங்கள் வெறுமையாக அமைய, கருவறையில் இறைவன் இலிங்கத் திருமேனியராய் எழுந்தருளியுள்ளார்.



(தொடரும்)

# நல்வழி பாடல்கள்

பாடல் 32

ஆறிடும் மேடும் மடுவும்போ லாம்செல்வம்

மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் – சோறிடும்

தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக

உண்ணீர்மை வீறும் உயர்ந்து

விளக்கம்:

ஆறு வரும் வழியில் உண்டாக்கும் மேடும் பள்ளம் போல, நம்முடைய செல்வம் ஒருநாள் அதிகமாகும் அல்லது குறையும். பூமியில் வாழும் மனிதர்களே இதை உணர்ந்து உங்களிடம் செல்வம் இருக்கும் போதே பசி என்று வந்தவருக்கு அன்னம் இடுங்கள், தாகம் என்று வந்தவருக்கு தண்ணீர் கொடுங்கள், நீங்கள் செய்த தர்மம் உங்களின் தலை காக்கும், அதுவே உங்கள் உயிர் உயரும் உபாயம் ஆகும்.

(திருவிளையாடற் புராணம் தொடர்)

# ஆடலுக்கு ஆட்படுவோம்

## காப்பு, நூற்பயன், வாழ்த்து

பகுதி-4



காசி ஸ்ரீ முனைவர்
நா.ரா.கி.காளைராசன்
(மேனாள் துணைப்பதிவாளர், அழகப்பா பல்கலைக்கழகம்)

உலகெலாம் சிவபெருமானின் திருவிளையாடல்கள் நிகழ்ந்து வருகின்றன. வடமொழி நூல்களில் உள்ள திருவிளையாடற் கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து ‘பரஞ் சோதி முனிவர்‘ பாடியுள்ளார். 3363 பாடல்களைக் கொண்ட திருவிளையாடற் புராணத்தின் 2 முதல் 5 முடிய உள்ள பாடல்களை இந்த இதழில் சிந்திப்போம்.

“சக்கியும் சிவமும் ஆகி, தனிப்பரமுத்தியான பரமேசுவரனைத் துதித்து வணங்கிட, சுத்தமான பொருளையுடைய சொற்களை வழங்கும் ‘சித்தி விநாயகர்‘ பொற்பாதங்களை வணங்குவோம்“ என்பது காப்புச் செய்யுள். காப்புச் செய்யுளைத் தொடர்ந்து, மதுரைக் காண்டம் ஆரம்பம் ஆகிறது. திருவிளையாடல் நூலைப் படிப்பதனால் கிடைக்கும் “நூற்பயன்“, “வாழ்த்து” பாடப் பெற்றுள்ளன.

### காப்பு

“வென்று உளே புலன் களைந்தார் மெய் உணர் உள்ளம் தோறும்

சென்று உளே அமுதம் ஊற்றும் திரு அருள் போற்றி, ஏற்றுக்

குன்று உளே இருந்து காட்சி கொடுத்து அருள் கோலம் போற்றி,

மன்று உளே மாறி ஆடும் மறைச் சிலம்பு அடிகள் போற்றி“



திருவருளைப் போற்றுவது முதற் சிறப்பு. 32 சிங்கங்கள், 64 சிவ கணங்கள், 8 வெள்ளை யானைகள் தாங்கி நிற்கின்ற குன்று போன்ற மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரின் கருவறைக்கு உள்ளே இருந்து காட்சி அருளுகின்ற சுயம்புலிங்கத்

(திருவிளையாடற் புராணம் பாடல் எண் 2)

அகத்தின்கண் புலன்களை வென்று போக்கினவரின், மெய்ப் பொருளை உணர்ந்த, உள்ளங்கள் தோறும், தானே விரும்பிப் போய், அவர்களின் அறிவினுள்ளே அமிழ்தத்தை ஊற்றுகின்ற திருவருள் போற்றி; வெள்ளிமலை போன்ற இடபத்தின் மேல் அமர்ந்து காட்சி அருளுகின்ற, திருவுருவம் போற்றி; வெள்ளியம்பலத்திலே கால் மாறி ஆடி அருளுகின்ற, வேதங்களைச் சிலம்பாக அணிந்துள்ள திருவடிகள் போற்றி. முக்கண் முதல்வனை மூன்று முறை போற்றி வழிபடுதல் சிறப்பு.

மதுரை சொக்கநாதரின் திருமேனியைப் போற்றி வணங்குது இரண்டாவது சிறப்பு. உமையொரு பாகமாகிய சிவபெருமான், தனது ஆண்பாகமாகமாகிய வலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கி ஆடுகிறார். ஆனால், அன்னை தடாதகைப் பிராட்டி அரசியாகி ஆட்சி செய்த மதுரையில் பெண்பாகமாகிய இடதுகாலை ஊன்றி, வலதுகாலைத் தூக்கி ஆடுகிறார். இடது காலை ஊன்றி, வலது காலைத் தூக்கி ஆடினால் அது கருவறையில் இருக்கும் சுயம்புலிங்கத் திருமேனியை நோக்கியிருக்கும். வெள்ளி அம்பலவாணன் கால்மாறியாடித் தனது வலது காலைத் தூக்கிக் கோயில் மண்டப வாயிலுள் நுழைந்து வருகின்றன அடியார்கள் பக்கம் காட்டி



தோள் போற்றி,

கரும் புருவச் சிலை போற்றி, கவுணியர்க்குப் பால் சுரந்த கலசம் போற்றி,

இரும்பு மனம் குழைத்து என்னை எடுத்து ஆண்ட அம் கயல் கண் எம் பிராட்டி

ஆடுகின்றார். மதுரையில் கால் மாறி ஆடும் அந்த மறைச்சிலம்படிகளைப் போற்றி வணங்குவது 3ஆவது சிறப்பு.

மூன்று மலைகளின் மையமாக மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது. மலையத்துவச பாண்டியனின் மகளாக மூன்று முலைகளுடன் அவதரித்த மலைமகளான அன்னை பராசக்தியின் திருக்கோயிலானது மூன்று மலைகளின் மையத்தில் அமைந்துள்ளது. நாகமலை, அரிட்டாபட்டி மலை, யானைமலை போன்றன மதுரையைச் சுற்றி அமைந்துள்ள மலைகள் ஆகும். இந்த மூன்று மலைகள் சூழ மதுரை மீனாட்சி அமர்ந்து அருள் சுரக்கிறாள்.

“ சுரும்பு முரல் கடி மலர்ப்பூம் குழல் போற்றி, உத்தரியத் தொடித் அரும்பும் இள நகை போற்றி, ஆரண நூபுரம் சிலம்பும் அடிகள் போற்றி“

(திருவிளையாடற் புராணம் பாடல் எண் 3)

தும்பிகள் மொய்க்கின்ற, வாசனை பொருந்திய மாலையணிந்த பூங்குழல் போற்றி; மார்பையும் முதுகையும் சுற்றி அணிகின்ற ‘உத்தரீயம்‘ என்ற மாராப்பு அணிந்துள்ள திருத்தோள்கள் போற்றி; வில் போன்று வளைந்துள்ள கருமையான புருவங்கள் போற்றி; திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் சுரந்து அருளிய, கலசம் போன்ற கொங்கைகள் போற்றி; இரும்பு போன்று இறுகிய என் மனதையும் இளகச் செய்து, என்னையும் எடுத்து ஆட்கொண்ட, அழகிய மீன்போன்ற கண்களையுடைய, எம் இறைவியின் புன்முறுவல் போற்றி; வேதங்களாகிய



அணிந்த அன்னையில் தோள்களைப் போற்றுவது சிறப்பு. அருள் வீசுகின்ற அன்னையின் கண்களைப் போற்றுவது சிறப்பு. திருஞானசம்பந்தருக்கு அமுதப்பால் கொடுத்த அன்னையின் முலைகளைப் போற்றுவது சிறப்பு. இரும்பு போன்ற கடிமான இதயம் கொண்ட நம்மையும் ஆட்கொண்ட அன்னையின் அரும்பு நகையைப் போற்றுவது சிறப்பு. வேதங்களை ஒலிக்கும் சிலம்புகளை அணிந்துள்ள

சிலம்புகள் ஒலிக்கின்ற திருவடிகள் போற்றி.

மதுரை அருள்மிகு சோமசுந்தரேசுவரரை மூன்றுமுறை போற்றி செய்து முனிவர் பாடியுள்ளார். மதுரையின் அரசியை, மாட்சிமை பொருந்திய உலகின் முதல் பெண்ணரசியை, ஐந்தெழுத்தனை மணந்த பிராட்டியை, ஐந்துகரத்தனை ஈன்ற தாயை ஐந்துமுறை போற்றி செய்து முனிவர் பாடியுள்ளார்.

அன்னையின் நறுமணம் மிகுந்த திருமுடியைப் போற்றுவது சிறப்பு. மாராப்பு என்ற உத்தரீயம்

அன்னையின் திருவடிகளைப் போற்றுவது சிறப்பு.

## நூற்பயன்

“கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்

நற்றாள் தொழாஅர் எனின்“ (2)

என்று திருவள்ளுவர் இரண்டாவது குறளில் கூறியிருப்பது போன்று, திருவிளையாடற் புராணத்தை அன்புடன் கேட்பவர்களுக்கு என்னென்ன பயன்கள் உண்டாகும் என்று பரஞ்சோதி முனிவர் 4ஆவது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

"திங்கள் அணி திரு ஆலவாய் எம் அண்ணல் திரு

விளையாட்டு இவை அன்பு செய்து கேட்போர்

சங்க நிதி பதுமநிதிச் செல்வம் ஓங்கித் தகைமை தரு

மகப் பெறுவர், பகையை வெல்வர்,

மங்கல நல் மணம் பெறுவர், பிணி வந்து எய்தார், வாழ்

நாளும் நனி பெறுவர், வான் நாடு எய்திப்

புங்கவர் ஆய் அங்கு உள்ள போகம் மூழ்கிப் புண்ணியர்

ஆய்ச் சிவன் அடிக்கீழ் நண்ணி வாழ்வர்"

(திருவிளையாடற் புராணம் பாடல் எண் 4)

சந்திரனை அணிந்த, திருவாலவாய் ஆகிய மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற, எம் இறைவன் புரிந்தருளிய, இந்த 64 திருவிளையாடல்களை, அன்போடு கேட்பவர்கள் அனைவரும், சங்கநிதி பதுமநிதிச் செல்வங்கள் பெருகும்; பண்புடைய மக்கட் பேற்றையடைவர்; பகைகளைக் கடப்பர்; மங்கலமாகிய நல்ல மணங்களைப்பெறுவர்; நோய்கள் வந்து அடையப் பெறார்; நீண்ட ஆயுளையும் பெறுவர்; விண்ணுலகிற் சென்று, தேவராய், அங்குள்ள இன்பங்களை மிக நுகர்ந்து, சிவபுண்ணியம் உடையவராய், சிவபெருமான் திருவடி நீழலில், இரண்டறக் கலந்து வாழ்வார்.

சங்கநிதி என்பது ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் அல்லது பல நிறுவனங்கள் ஒன்று சேர்ந்து ஒரு தொழில் அல்லது வியாபாரத்தை நடத்தி நிதியைப் பெருக்குவதாகும். பதுமநிதி என்பது ஒரு நபரோ அல்லது ஒரு நிறுவனமோ தனிப்பட்ட முறையில் தாமரை இதழ்கள்போல் விரிந்து பரந்து நிதியைப் பெருக்குவதாகும். திருவிளையாடற் புராணத்தை அன்புடன் கேட்பதால் சங்கநிதி மற்றும் பதுமநிதிச் செல்வம் ஓங்கும் என்கிறார் பரஞ்சோதி முனிவர். இந்த இரண்டு நிதிச் செல்வங்களும் குபேரனிடத்தில் உள்ளனவாம். அப்பரும், 'சங்கநிதி பதுமநிதி யிரண்டுந்தந்து' எனப் பாடியுள்ளார்.

## வாழ்த்து

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு

இறையென்று வைக்கப் படும்

(குறள் எண்:388)

இறைவன் இறைவியைப் போற்றி வணங்கியதைத் தொடர்ந்து "முறை



செய்து மக்களைக் காக்கும்” மன்னவனைப் போற்றி, அவனது நல்லாட்சி சீரோடும் சிறப்போடும் நீடித்து நிலைத்திருக்க வேண்டும் என்று நீதிவழுவாச் செங்கோலை வாழ்த்துவர். “புரவலன்” என்றால் அரசன் என்றும், “செங்கோல்” என்றால் சிறந்த ஆட்சிமுறை என்றும் பொருள். “புரவலன் செங்கோல் வாழ்க” என்பது, அரசனின் ஆட்சியானது நீதியுடன் நேர்மையாக நீடித்திருக்க வேண்டும் என்று வாழ்த்துவது ஆகும்.

“மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்

பல்குக வளங்கள் எங்கும் பரவுக அறங்க ளின்ப

நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்

புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க“

(திருவிளையாடற் புராணம் பாடல் எண் 5)

வேதத்திற் கூறப்பட்ட வேள்விகள் நிரம்புக; மழைமுகில்கள் நீரினைச் சுரந்து பொழிக; வளங்கள் பெருகுக; எல்லா இடங்களிலும் அறத்தினை அடிப்படையாகக் கொண்ட தருமங்கள் பரவுக; எல்லா உயிர்களும் இன்பம் அளிக்கப்படுக; உலக முழுதும், நான்கு வேதங்களின் பொருளாகிய சைவ சமயம் தழைத்தோங்கி நிலைபெறுக; மாட்சிமை பொருந்திய அரசனது செங்கோல் வாழ்க.

மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரரின் திருவடிகளைப் போற்றுவோம். திருவிளையாடற் புராணத்தை அன்புடன் படித்தும் கேட்டும், செல்வம் பெருகி, நன்மக்களைப் பெற்று, பகையை வென்று, வளமாக நலமாக நீடு வாழ்வோம். மாட்சிமை பொருந்திய மன்னனின் செங்கோல் ஆட்சியில் சைவம் ஓங்கித் தழைக்கட்டும்.



தொடரும்

# தினசரி வாழ்க்கைக்குத் திருப்புகழ் - 2



**டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன், ஈப்போ, மலேசியா**

## எதை நினைக்கிறாயோ, அதுவாக நீ ஆகிறாய்

திருப்புகழ் ஓர் ஆன்மீக நூல். அதைப் படிக்கும் ஒவ்வொரு ஆன்மாவும் முருகனின் புகழைச் சொல்ல வைக்கக்கூடிய நூல். அப்படி முருகனின் புகழைச் சொல்லும்பொழுது, அந்த ஆன்மா முருகனின் தன்மையை அடைகின்றது. இதுதான் திருப்புகழ் சூட்சுமம்.

”நீ எதை மனதார நினைக்கிறாயோ, அப்படியே அதுவாக நீ ஆகிறாய்” என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள். முருகனை நினைத்து, முருகன் புகழைப் பாடுபவர்கள், ஒரு கட்டத்தில் முருகனின் தன்மையை அடைந்து, முருகனாகவே மாறி விடுகின்றார்கள். அவர்களுக்குள் இருக்கும் முருகன், ஒரு நாள் வெளிப்படுவான்.

முருகனின் புகழைச் சொல்வதையே முதன்மையாகக் கொண்டிருந்தாலும், மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து செய்திகளையும் திருப்புகழில் அங்காங்கே பதிவு செய்கின்றார் அருணகிரிநாதர். இதனால்தான், திருப்புகழைக் கற்றவர்கள், வேறு எதையும் படிக்கத் தேவையில்லை என்று சிறப்புப் பாயிரமொன்று உறுதியளிக்கின்றது.

”வேதம் வேண்டாம், சகல வித்தை வேண்டாம், கீத

நாதம் வேண்டாம், ஞானநூல் வேண்டாம் ஆதி

குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்



உணவு, தமோ குணமுள்ள உணவு, சாத்வீக குணமுள்ள உணவு என்று பிரித்தார்கள். இதில் சாத்வீக உணவு மட்டுமே உடலுக்கும், உள்ளத்திற்கும் நல்லது. சுருக்கமாகச் சொன்னால், ஆறு சுவைகளும் சமநிலையில் இருப்பது சாத்வீக உணவில்தான். அறு சுவைகள் கூடினாலும் உடம்பு கெடும். அவை குறைந்தாலும் உடம்பு கெடும். உடம்பு மட்டுமல்ல, இவர்களின் உள்ளமும் கெடும். ஏனெனில், உள்ளம், உடல், உணவு என்ற மூன்றும் நெருங்கிய தொடர்புடையவை.

திருப்புகழைக் கேளீர் தினம்"

என்பது அந்தச் சிறப்புப் பாயிரம்.

## திருப்புகழில் உணவு

நம்முடைய தினசரித் தேவைகளில் மிக முக்கியமானது "உணவு". உண்ண உணவும், உடுக்க ஆடையும் படுக்க ஓர் இடமும் மனிதனின் அத்தியாவசியத் தேவைகள். ஒரு சாதாரண மனிதனுக்கு இந்தத் தேவைகள் பூர்த்தியான பின்பே பக்தியும், முக்தியும்.

மனிதன் உண்ணும் உணவு, அவன் உடலை மட்டுமல்ல, உணர்வுகளையும் தீர்மானிக்கின்றது. இதனால்தான், நம் பெரியோர்கள் உணவைக் கூட ரஜோ குணமுள்ள

இன்றைக்கு உடல்ரீதியில் மனோரீதியில் வரும் பெரும்பாலான வியாதிகளுக்கு அடிப்படை தவறான உணவுப் பழக்கங்கள். அறுசுவையும், அளவாக அமைந்த சாத்வீக உணவுகளை உண்பவர்கள் அதிக நாட்கள் மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள். திணீஃமீ திஷீஷீபீ என்ற பெயரில் விரைவு உணவுக் கடைகளில், காரசாரமாகச் சாப்பிட்டுப் பழகியவர்கள் விரைவாகவே எமனையும் சந்திக்கிறார்கள்.

## சாதம் பிரசாதம்

இந்தச் சாத்வீக உணவை



இறைவனுக்குப் படைக்கின்றோம். தூய அன்போடும், பக்தியோடும் சமைக்கப்படும் பிரசாதத்தைக் கொஞ்சம் உண்ணும்பொழுதே மனம் நிறைவடைகின்றது. இதற்குக் காரணம், இறைவனுக்குப் படைக்கப்படும்பொழுது, கருவறையில் இருக்கும் தெய்வீகக் கதிர்களும் மந்திர உச்சாடனங்களின் அதிர்வுகளும் அந்தப் பிரசாதங்களைச் சிறப்புடையதாக்குகின்றன. இந்த உணவுகளினால், நம் உடலும் , உணர்வும் மேன்படுகின்றது.

இறைவனுக்குப் படைத்து உண்ணும் பொழுது, இது புனிதமடைகின்றது. சாதத்தைப் பக்தியோடு இறைவனுக்குப் படைத்தால் அது “பிர”சாதம்.

சாதத்தைவிட பிரசாதம் சிறப்புடையது. இறைவனுக்குப் படைக்கும் உணவை, இறைவன் உண்பதில்லை. இறைவனின் பெயரைச் சொல்லி நாம்தான் உண்கிறோம். ஆனால், இதுவும் நன்மைக்கே.

சாத்வீக உணவுகளையே

## பிள்ளையாருக்குப் பிடித்த 21 வகை நிவேதனங்கள்

அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் ”முத்தைத்தரு” என்று முதல் திருப்புகழ் எழுதுகின்றார். அதன்பிறகு பதினாறு ஆண்டுகள் மோனத் தவத்தில் ஆழ்ந்துவிடுகின்றார். பிறகு, முருகனின் கட்டளையின் பேரில், வயலூருக்கு வருகின்றார். என்ன பாடுவது என்று முருகனிடம் கேட்கத்

தன்னுடைய மயில், வேல், சேவல், மலர்மாலை, திருவடி, பன்னிரு தோள்கள், தாம் அமர்ந்துள்ள பதியாகிய வயலூர் ஆகியவற்றை வைத்துப் பாடச் சொல்கிறார். இந்தப் பாடலை வயலூர் விநாயகர் முன்பு அருணகிரிநாதர் பாடுகின்றார். இந்தப் பாடலில்தான், விநாயகப் பெருமானுக்கு உரிய 21 வகையான நிவேதனப் பொருட்களின் பட்டியலைப் பதிவு செய்கின்றார்.

இந்த 21 பொருட்கள் விநாயகப் பெருமானுக்கு மட்டுமல்ல, நமக்கும் உகந்த சாத்வீக குணங்கள் கொண்ட பிரசாதங்கள். இன்றைக்கும் ”பிள்ளையார் நோன்பு” என்று பிள்ளையாருக்காக 21 நாட்கள் நோன்பிருந்து, பிள்ளையாரை வழிபடும் நகரத்தார் பெருமக்களும், நிறைவு நாளன்று, பிள்ளையாருக்குப் படைக்கும் பிரசாதங்களில் இந்த 21 பிரசாதங்களும் முக்கியமானவை. ஆனால், பிள்ளையாருக்குப் படைத்துவிட்டு நம்முடைய அன்றாட வாழ்வில் அதில் ஓரிரு உணவுகளைத் தவிர, பெரும்பாலான உணவுகளை நாம் மறந்து வருகிறோம்.

**சாத்வீகத் தன்மை கொண்ட இந்த உணவுகளின் பட்டியல் பின்வருமாறு:**

”இக்கு (கரும்பு), அவரை,




நற்கனிகள், சர்க்கரை, பருப்பு, நெய், எள், பொரி. அவல், துவரை, இளநீர், வண்டெச்சில் (தேன்), பயறு, அப்ப வகைகள், பச்சரிசி, பிட்டு, வெள்ளரிப் பழம், இடிப்பல் வகை (இடித்துச் செய்யப்பட்ட மாவிலால் ஆன சிற்றுண்டிகள்), தனிமூலம் என்று சொல்லக்கூடிய வேரில் முளைத்த கிழங்கு வகைகள், மிக்கடிசில் (மிகுந்த அன்னம்) ,

கடலை” என்ற 21 வகையான உணவு வகைகளை பட்சணமாக உண்ணும் விக்கினசமர்த்தன் என்னும் அருட்பெருங்கடலே! என்று வயலூர் விநாயகப் பெருமானை விளித்துக் கூறுகின்றார் அருணகிரிநாதப் பெருமான் .

இப்படிப்பட்ட சாத்வீகத் தன்மையுள்ள உணவு வகைகளைப் படைத்து, அதைப் பிரசாதமாக நாம் உண்ணும்பொழுது, உடல் நலத்தோடு மன நலமும் கூடுகின்றது. அருணகிரிநாதர் குறிப்பிட்டுள்ள உணவு வகைகளில் பலவற்றை நாம் இன்று மறந்துவிட்டோம்.

விநாயகப் பெருமானுக்குப் படைக்கப்படும் பிரசாதங்கள் வரிசையில் கரும்பு முதல் இடம் பெறுகின்றது .பொங்கலன்று கூட நாம் கரும்பைக் கடித்துண்ணத் தவறிவிட்டோம். சிற்றுண்டி என்ற பெயரில் ஏதேதோ நாக்கிற்கு மட்டும் சுவை தருபவற்றை நாடுகின்றோம். இன்றைக்குக் கரும்பு கடித்து மகிழ்ந்த காலங்கள் கனா காலங்கள் ஆகிவிட்டன.

அவரை நார்ச்சத்து மிக்கது . Folate என்ற உயிர்ச்சத்து நிறைந்தது. மரபணு உற்பத்தி, இரத்த விருத்தி போன்றவற்றிற்கு மிக உகந்தது. கிட்டத்தட்ட 30 வகையான அவரை வகைகள் உள்ளன.

நல்ல கனிகள், சர்க்கரை, பருப்பு, போன்றவை நம் வாழ்க்கைக்கு இனிமை சேர்ப்பவை. நெய்யில் இருக்கும் நல்ல கொழுப்பு மூளைக்குச் சிறந்த உணவு. எலும்பு உறுதிக்கு எள் அவசியம். பொரி உண்பதால் உடல் எடை குறையும். பொரி குழந்தைகளுக்கு ஏற்றது. எளிதாகக் கிடைக்கக் கூடியது.

அவல் எளிதில் செரிமானமாகக் கூடியது. உடல் சூட்டைத் தணிக்கும். சர்க்கரை நோயாளிகளுக்குச் சிறந்த உணவு. துவரை ரத்த ஓட்டத்தைச் சீராக்கும் அருமருந்து. புரதச் சத்து மிக்கது. இப்படி அருணகிரிநாதர் சொல்லியுள்ள ஒவ்வொரு உணவு வகையும் மகத்துவம் மிக்கவை. உங்களை மருத்துவரிடம் செல்லாமல் தடுப்பவை.

## நிறைவுரை

பக்தியோடு இறைவனுக்குப் படைத்து நாமும் உண்ணும்பொழுது இவையே உடலையும், உயிரையும் வளர்க்கும் அமுதம். நாம் எதை உண்ணுகின்றோமோ அதுவாக நாம் ஆகின்றோம். இந்த உடம்பே ஒரு உணவுக் குவியல். அன்னமய கோசம் என்று நாம் உண்ணும் உணவினால்

ஆனந்த உடலைச் சொல்வார்கள் .

இதை உணர்ந்து இறைவன் பெயரால், படைக்கப்பெறும் சாத்வீக உணவுகளை உண்போம். சத்துவ குணம் பெறுவோம்.

திருப்புகழில் பல இடங்களில் உணவு பற்றிய குறிப்புகள் வருகின்றன. அருணகிரிநாதர் தேனும், தினையும் முருகனுக்குப் பிடித்தவை என்று கொண்டாடுகின்றார். ஆனால், தினை போன்ற சிறுதானியங்களை நாம் இன்று, நம் அன்றாட உணவில் தொலைத்துவிட்டோம்.

தினசரி வாழ்க்கையில் அருணகிரிநாதர் சொல்லிய உணவு வகைகளைச் சேர்ப்போம். திருப்புகழ் வழி நடப்போம். ஏனென்றால், திருப்புகழ் நம் வழிபாட்டு நூல் மட்டுமல்ல, தினசரி வாழ்க்கைக்கு வழிகாட்டும் நூல் .

## 2 விநாயகர் திருப்புகழ் பக்கரை விசித்ரமணி

திருப்புகழ் 02
பக்கரை விசித்ரமணி
விநாயகர் துதி
KAAVADI காவடி
பக்கரைவி சித்ரமணி
பொற்கலணை யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர
...... கமுநீபப்
0:08 / 2:53

**வீடியோவின் புறவழி இணைப்பு**

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை

பட்சியெனு முக்ரதுர ...... கமுநீபப்

பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய

பட்டுருவ விட்டருள்கை ...... வடிவேலும்

திக்கதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு

சிற்றடியு முற்றியப ...... னிருதோளும்

செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு

செப்பெனஎ னக்கருள்கை ...... மறவேனே

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்

எட்பொரிய வற்றுவரை ...... இளநீர்வண்

டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள

ரிப்பழமி டிப்பல்வகை ...... தனிமூலம்

மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு

விக்கிநச மர்த்தனெனும் ...... அருளாழி

வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்

வித்தகம ருப்புடைய ...... பெருமாளே.



# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம் - பாடல் 25

## எதற்கு?



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

அன்னைக்கு அவனை நினைத்தால் ஒரு பக்கம் இன்பம் உண்டாகிறது; ஒருபக்கம் துன்பம் எழுகிறது.

சிறிய சிறிய பதவி உடையவர்களெல்லாம் எவ்வளவு ஆடம்பரமாக இருக்கிறார்கள்! எவ்வளவு பெரிய மாளிகையில் வாழ்கிறார்கள்! பிறருடைய தயவாலே பிழைப்பவர்கள் கூட, அதைக் காட்டிக் கொள்ளாமலே, தாமே சுதந்திரமாக வாழ்பவர்களைப் போலல்லவா தோற்றம் அளிக்கிறார்கள்?

அப்படியிருக்க இந்தப் பெருமான் மட்டும் தன்னைக் குறைத்துக் கொள்வானேன்?

அவன் அருள் செய்ததனால் இந்த உலகம் இயங்குகிறது. மக்கள் வாழ்கிறார்கள். வானம் மழையைப் பொழிகிறது. சூரிய சந்திரர்கள் ஒளியை வீசுகிறார்கள். தேவலோகத்தில் பலபல பதவிகளில் இருப்பவர்கள் யாவரும் அவனுடைய அருளாணையால் வளைய வருகிறார்கள். இந்திரன் கற்பகம், காமதேனு, சிந்தாமணி என்ற அரிய பொருள்களை உடையவனாய், இணை யில்லாத போகத்தை நுகர்கிறான். இப்படியே எல்லாத் தேவர்களும் வாழ்கிறார்கள். அவ்வளவு பேருக்கும் வாழ்வளிக்கிறவன் எம்பெருமான். எல்லாருக்கும் உணவும் உறையுளும் வழங்குகிறவன் அவன்.

அத்தகையவன், எல்லோருக்கும் எல்லாவற்றையும் வழங்கும் பெரு வள்ளல், கையில் ஓடு ஏந்திப் பிச்சைக்குப் போவது என்றால் பொருத்தமாக இருக்கிறதா? பெரிய மனிதர் வீட்டுக்குப் போய் யாருக்கும்



தெரியாமல் வாங்கினாலும் குற்றம் இல்லை. எங்கும் போகிறான்; யாரிடமும் பிச்சை வாங்குகிறான். இந்த வெட்கக்கேட்டை யாரிடம் சொல்வது?

அவனை ஈசுவரன் என்று பெரியவர்கள் சொல்கிறார்கள். அவனிடம் இல்லாத ஐசுவரியம் ஏதும் இல்லை. ஐசுவரியம் என்பதே ஈசுவரன் என்றதிலிருந்து வந்தது தானே? “சென்று அடையாத திருவுடையவன்” அவன். அவனிடம் உள்ள செல்வம் குறையாது; கூடாது. அது பூரணமானது. அப்படி இருந்தும் இப்படிப் பிச்சை எடுக்கலாமா?

அவன் தன் தகுதியை எண்ணுகிறானா? நாம் அவனுடைய பெருமையை எண்ணிக் கவலைப்படுகிறோம்; தன் கௌரவத்துக்கு ஏற்றபடி நடந்துகொள்ளவில்லையே!’என்று அங்கலாய்க்கிறோம். அவனோ எதையும் எண்ணுவதில்லை. மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதையும் எண்ணுவதில்லை. எண்ணாதே எங்கும் பலி எடுக்கிறான்.

தாருகாவனத்து மங்கையர்முன் போய்ப் பிச்சை கேட்டான். திகம்பரனாகச் சென்று பிச்சை கேட்டான். திருமாலின் முன் பிச்சை ஓட்டை நீட்டினான். கையில் கபாலத்தை, வைத்துக் கொண்டு பிச்சை கேட்டான். கபாலி என்று வேறு பேர் பெற்று விட்டான் அவன் எப்படி எங்கே பிச்சைக்குப் போகிறான் என்ற வரையறை உண்டா? எத்தனையோ விதங்களில் அவன் கோலம் கொண்டு ஊர்தோறும் பலிக்கு உழலுகிறான்.

பகலெல்லாம் பிச்சை வாங்குகிறான். இராத்திரியிலே அவனுக்கு ஒரே களியாட்டம்; நடனமாடுகிறான். வீதியிலே பிச்சை எடுப்பது கிடக்கட்டும் இரவிலே நடனமாடுகிறானே, அதற்கு அரங்கமா இல்லை? அவன் எங்கே ஆடுகிறான் தெரியுமா? சுடுகாட்டில், நள்ளிரவில் ஆடுகிறான். அந்த ஆட்டத்தைக் கண்டு ரசிப்பவர்கள் யார் தெரியுமா? சொன்னால் வெட்கக் கேடு. பேய்கள் தாம் அவனுடைய ரசிகர்கள். அவனைப் பித்தனென்றும் பேயனென்றும் சொல்வது எவ்வளவு சரி என்று இப்போது தெரிகிறது.

“இப்படிப் பகலிலே ஊர்தோறும் திரிந்து பிச்சை எடுப்பதும், இரவிலே, ஈமவனத்தில் ஆடுவதும் ஏன் ஐயா? உமக்கு என்ன தலை எழுத்தா?’ என்று. யாராவது அவனைக் கேட்கிறார்களா? வேண்டியவர்கள் கேட்க அஞ்சி நடுங்குகிறார்கள். வேண்டாதவர்கள், “இப்படியே அலையட்டும்; நாம் அவனைப் பரிகசித்து கொண்டே இருப்போம்” என்று இருக்கிறார்கள். நாமே சும்மா கிடந்து புலம்புகிறோம். அவனுக்கு இப்படி எல்லாம் ஏன் புத்தி போகிறதென்று சொல்லிச் சொல்லி வருந்துகிறோம்.

‘அவனைப் பற்றி இங்கே இருந்து நாம் என்ன புலம்பினால்தான் என்ன? மற்றவர்கள் தடுக்க மாட்டார்களா என்று சொல்லித்தான் என்ன பயன்? நாமே கேட்டால் என்ன? ஆம், அதுதான் சரி. இங்கே அவன் இல்லாதபோது எத்தனை சொன்னாலும் யார் கேட்கப் போகிறார்கள்? அவனைக் காணும்போது நேரே வைத்து, “ஏன் ஐயா, இப்படியெல்லாம் செய்கிறாய்? இந்தப் பிச்சைக்காரக் கோலம் எதற்கு? இந்தப் பேய். நடனம் எதற்கு? என்று கேட்டு விடுவோம்.

இப்படியெல்லாம் தாயன்பினாலே காரைக்கால் அம்மையார் எண்ணுகிறார். அந்த எண்ணம் பாடலாக உருவெடுக்கிறது.

இங்கிருந்து சொல்லுவது ஏன்? எம்பெருமான் எண்ணாதே

எங்கும் பலிதிரியும் எத்திறமும், ஷை பொங்கு இரவில்

ஈமவனத்து ஆடுவதும் என்றுக்கு? என்று ஆராய்வோம்,

நாம் அவனைக் காணலுற்ற ஞான்று.

இது அற்புதத் திருவந்தாதியில் 25 ஆவது பாட்டு.

23ஆம் பாடலுக்கு உரை அமையவில்லை. 24 ஆம் பாடல் முன்னமே திருநெல்லை இதழில் கார்த்திகை தீபம் கருதி வெளியிடப் பெற்றுவிட்டது.



# பிரலம்பாசுரனுக்கு முக்தி அளித்த பலதேவர்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

தேவகிக்குப் பிறக்கும் எட்டாவது குழந்தையினால் தனக்கு அழிவு ஏற்படும் என்பதை அசரீரி கூறக் கேட்ட கம்சன் ஒவ்வொரு நாளும் கோகுலத்துக்குக் கிருஷ்ணரை அழிக்கப் பூதனா, சகாட்சுரா, பகாசுரா என்று அரக்கர்களை அனுப்பிக் கொண்டிருந்தான். இவர்களை எல்லாம் குழந்தை கிருஷ்ணர் அழித்ததால் அடுத்துப் பிரலம்பாசுரன் என்பவனை அனுப்பினான்.

யமுனை நதிக்கரையில் பாண்டீரவனம் என்றொரு வனம் இருந்தது. ஆநிரைகளின் மேய்ச்சலுக்கு உகந்த இடம் பசும்புற்களும், சுனைப் புற்களும், நிரம்பிய இடம் அது. மேலும் குழந்தைகள் எல்லாம் ஊஞ்சலாடி மகிழ ஆலம் விழுதுகளும் கைகோர்த்துக் காட்சி அளிக்கும். ஆயர்பாடிச் சிறுவர்களுக்குப் பிடித்த அற்புத வனம் அது.



அங்கே பலதேவரும் கிருஷ்ணரும் ஆயர்பாடிச் சிறுவர்களான இளம்

கோபர்களுடன் பச்சைக் குதிரை தாண்டுதல், குதிரை ஏறுதல் போன்ற விளையாட்டை விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது அங்கே ஒரு புதிய சிறுவன் வந்தான். பார்ப்பதற்கு ஆயர்பாடிச் சிறுவன்போலத் தோன்றினாலும் கிருஷ்ணருக்கு அவனைப் பார்த்ததும் அவன் கம்சன் அனுப்பிய அரக்கனின் அம்சம் என்பது புரிந்து விட்டது.

இந்த அரக்கனுக்கு ஒரு முற்கதை உண்டு. அவன் ஹூஹூ என்னும் கந்தர்வனின் மகன் விஜயன். ஒரு முறை குபேரன் சிவபூஜை செய்யத் தன்னுடைய நந்தவனத்தில் அபூர்வ மலர்ச் செடிகளை நட்டு வைத்திருந்தான். அந்த அபூர்வ மலர்களுக்குப் பலத்த காவல் போட்டும் அவை திருடு போய்க் கொண்டிருந்தன. இதனால் கோபமுற்ற குபேரன் “என் தோட்டத்தில் இந்த அபூர்வ மலர்களைத் திருடுபவர்கள் யாராக இருந்தாலும், அவன் மனிதனோ, யக்ஷனோ, தேவனோ, கந்தர்வனோ எப்பேர்ப்பட்டவனாக இருந்தாலும் பூமியில் அசுரனாகப் பிறக்கக் கடவான்” என்று சாபமிட்டிருந்தான்.

இதை எல்லாம் அறியாத விஜயன் தன் வீணையில் இனிய இசையை மீட்டி, விஷ்ணுவின் புகழைப் பாடிப் பரவியபடி இந்த அபூர்வ வனத்துக்கு வந்து சேர்ந்தான்.



அவனுக்குக் குபேரனின் சாபம் பற்றி ஏதும் தெரியாது. பூக்களின் நறுமணத்திலும் அழகிலும் மயங்கிய அவன் அங்கிருந்த சில பூக்களைப் பறித்ததுதான் தாமதம், அழகிய கந்தர்வன் உருவம் மறைந்து அசுர உருவம் பெற்றான்.

திடுக்கிட்ட அவன் அந்தத் தோட்டத்துக்கு உரிமையாளனான குபேரனைக் கண்டு சரணடைந்து வணங்கிச் சாபத்திலிருந்து விடுவிக்க வேண்டினான். அதற்குக் குபேரன், ”விஷ்ணு பக்தனான உனக்குக்

காலம்கனியும் போது அவரது திருக்கரத்தாலேயே சாப விமோசனம் கிட்டும்'' என்று வரமளித்தான். அந்தக் கந்தர்வன்தான் பிரலம்பாசுரனாகக் கம்சனின் ஆணைக்குக் கட்டுப்பட்டுப் பாண்டீர வனத்துக்கு ஆயர்பாடிச் சிறுவன் உருவில் வந்திருந்தான்.

''நானும் உங்களோடு விளையாடலாமா'' என்று அவன் வினயமாகக் கேட்டதும் கிருஷ்ணரும் ஒப்புக் கொண்டு "நாம் இப்போது அணி பிரித்து விளையாடுவோம்.'' என்றார். கிருஷ்ணர் தலைமையில் ஓர் அணி என்றும் பலராமர் தலைமையில் இன்னொரு அணி என்றும் முடிவானது. கிருஷ்ணரின் அணியில் பத்ரசேனர், புதிதாக வந்த சிறுவன் ஆகியோர் இருக்கப் பலராமர் அணியில் ஸ்ரீ தாமனும் விருஷபனும் சேர்ந்து கொண்டார்கள்.

போட்டி இதுதான் இரு அணியும் யுத்தம் செய்ய வேண்டும். போட்டியில் தோற்கும் அணியைச் சேர்ந்தவர்கள் வெற்றி பெற்ற அணியில் உள்ளவர்களைத் தம் முதுகில் குறிப்பிட்ட தூரம்வரை சுமந்து சென்று இறக்கிவிட வேண்டும். இரு அணியினரும் ஒப்புக் கொண்டு யுத்தத்தைத் தொடங்கினார்கள். ஒருபக்கம் பசுக்கள் அவை பாடு மேய்ந்து கொண்டிருந்தன. இன்னொரு பக்கம் விளையாட்டு மும்முரத்தில் பாண்டீரவனம் காடு அல்லோலகல்லோலப் பட்டது.

ஒரு வழியாக ஸ்ரீ தாமனும், விருஷபனும் இருந்த பலராமரின் அணி வெற்றி பெற்றது. தோல்வியுற்ற கிருஷ்ணரின் அணி அவர்களைச் சுமக்க வேண்டியதாயிற்று. ஸ்ரீ தாமனை கிருஷ்ணரும், விருஷபனைப் பத்ரசேனரும் சுமந்து செல்லத் தொடங்கினார்கள். இதேபோல் புதிதாக வந்த ஆயர்குலச் சிறுவன் தன் முதுகில் பலராமரைச் சுமந்து செல்லத் தொடங்கினான்.

கிருஷ்ணரும், பத்ரசேனரும் குறிப்பிட்ட தூரம் வந்ததும் ஸ்ரீ தாமனையும், விருஷபனையும் இறக்கி விடப் புதிதாக வந்த சிறுவனோ பலராமரைச் சுமந்து கொண்டு பாண்டீரவனத்தினூடே யமுனை நதிக்கரை வரை வெகுதூரம் சென்றான். அவனுடைய நோக்கம் என்னவோ பலசாலியான கிருஷ்ணரை விட்டு விலகி பலராமரை மதுராவுக்குத் தூக்கிக் கொண்டு போவது போலிருந்தது.

கிருஷ்ணரின் கண்ணை விட்டு மறைந்து சிறிது தூரம் செல்லச் செல்ல அச்சிறுவன் திடீரெனக் கருமேகம் போல் உருவம் கொண்டு பயங்கர அசுர உருவம் எடுத்தான். அவன் கண்கள் நெருப்பாய் மின்ன, கூரிய



அமர்ந்திருந்த பலராமரின் பாரம் அதிகமானது. அவன் திணற ஆரம்பித்தான். பலராமரின் காதுகளில் இருந்த குண்டலங்கள் அந்த மேகத்தைக் கீறிய மின்னல்கள் போல் ஒளிவிட்டன. நடக்கத் திணறிய அவனின் தலையில் இந்திரனின் வஜ்ராயுதம் போல் தன் முஷ்டியை மடக்கி ஓங்கி ஓர் அடி கொடுத்தார் பலராமர். மலை உடைவது போல் அவன் தலை உடைந்து கீழே விழ அவனது உடலிலிருந்து ஓர் ஒளி பிரிந்து பலதேவரோடு ஐக்கியமானது.

விஷ்ணு பக்தனான அவன் விஷ்ணுவின் அம்சமான பலதேவரோடு இரண்டறக் கலந்து மோட்சத்தை அடைந்து முக்தி பெற்றான்.

பற்களும் வெளிப்பட்டன. இதைக் கண்ட பலராமர் சில கணங்கள் வியப்பெய்தினார். அரக்கனின் நோக்கம் அறிந்திருந்தாலும் தன் அண்ணன் பலராமர் அவனிடமிருந்து எப்படியும் தப்பிவிடுவார் என்பதை உணர்ந்திருந்தார் கிருஷ்ணர்.

அதேபோல் கருமேகம் போல் ஓடிய அந்த அரக்கனின் முதுகில்

பலராமர் மீது தேவர்கள் மலர் தூவி ஆசீர்வதித்தனர். இவ்வாறு கம்சன் அனுப்பிய ஒவ்வொரு அசுரர்களிடமிருந்தும் ஆயர்பாடிச் சிறுவர்களான பலதேவரும் கிருஷ்ணரும் தம் அபரிமிதமான தெய்வ பலத்தால் தப்பினர்.



## சிவாலயங்களின் சிறப்புகள் - 14



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்குப் பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# நவகைலாயம் பகுதி- 6

9. சுக்கிரன் சேர்ந்தபூமங்கலம் கைலாசநாதர் கோவில் சேர்ந்தபூமங்கலம்

**நட்சத்திரம்:** பரணி, பூராடம், பூரம்

**மூலவர்:** ஸ்ரீகைலாசநாதர்

**அம்பாள்:** ஸ்ரீசௌந்தர்யா நாயகி

**திருக்கோவில் விருட்சம்:** வில்வம்

**தீர்த்தம்:** தாமிரபரணி.

திருச்செந்தூரில் இருந்து புன்னைக்காயல் செல்லும் சாலையில் ஆத்தூரில் இருந்து 3 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

நவக்கிரகங்களில் சுக்கிர பகவான் ஆட்சி புரியும் நவ கைலாய தலமாக விளங்குவது " சேர்ந்த பூ மங்களம் “. இத் தலத்தின் அருகில் தான் தாமிரபரணி ஆறு கடலில் சங்கமிக்கிறது. எத்தனையோ இயற்கை சீற்றங்களை இந்த ஊர் சந்தித்து இருந்தாலும், இத் திருக் கோயில் மட்டும் மிக கம்பீரமாக காட்சி அளிக்கிறது. அகத்திய முனிவர் ஆற்றில் விட்ட மலர்களில் ஒன்பதாவது மலர் வந்து நின்ற இடம் இது. மற்ற தலங்களை போலவே இங்கு இறைவன் ஸ்ரீ கைலாச நாதராகவும், அம்மை சிவகாமி அம்பாளாகவும் அருளுகின்றனர். திருச் சுற்றில் தட்சிணா மூர்த்தி, கன்னி விநாயகர், வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர், நவக்கிரகங்கள் மற்றும் சனீஸ்வரர் ஆகியோர் தனி சந்நதி கொண்டு அருள்பாளிக்கின்றனர். இறைவன் சந்நதி கிழக்கு நோக்கியும், அம்பாள் சந்நதி தெற்கு நோக்கியும்



நெற்றிப்பட்டை ஆகியவை சாற்றி அலங்காரம் செய்யப்படும்.

**சௌந்தரிய நாயகி:**

தெற்கு நோக்கிய தனி கருவறையில் சௌந்தரிய நாயகி அம்மை புன்னகை காட்டும் முகத்துடன், நின்ற கோலத்தில் தனது ஒரு கரத்தில் மலர் ஏந்தியும், மற்றொரு கரத்தைக் கீழே தொங்கவிட்ட படியும் காட்சித்தருகிறாள். விஷேச காலங்களில் அம்மையின் திருமேனிக்கு முழு சந்தனக்காப்பு அலங்காரம் செய்யப்படும்.

**சேர்ந்தபூமங்கலம் திருக்கோவில் அமைப்பு**

கிழக்கு திசை நோக்கி அமையப்பெற்ற இந்தக் கோவிலின் உள்ளே நுழைந்து உடன் பலிபீடம், கொடிமரம், நந்தி ஆகியவை காட்சித் தருகின்றன. அவற்றை தரிசித்து உள்ளே நுழைந்தால் இடப்புறம் வடக்கு நோக்கிக் காட்சித் தரும் அதிகார நந்தியை தரிசிக்கலாம். அவரை வணங்கி உள்ளே சென்றால் கிழக்கு திசை நோக்கிய கருவறையில் சுவாமி ஸ்ரீ கைலாசநாதர் காட்சித் தருகிறார்.

அமைந்துள்ள இத் திருத்தல வழிபாட்டினால் சுக்கிர யோகம் கிடைக்கும் என்பது சர்வ நிச்சயம்.

அகத்தியர் ஆணைப்படி ஒன்பது மலர்களை உரோமச மகரிஷி தாமிரபரணியில் மிதக்க விட, அந்த மலர்கள் கரை சேர்ந்த இடத்தில் எல்லாம் சிவ லிங்க பிரதிஷ்டை செய்து உரோமச மகரிஷி வழிபட்டதாகக் கூறப்படுகிறது. அவற்றுள் கடைசி மலர் கரை சேர்ந்த இடம் இது என்பதால் இந்த ஊர் சேர்ந்த பூ மங்கலம் என அழைக்கப் படுகிறது.

**சுவாமி கைலாசநாதர்:**

கிழக்கு நோக்கிய தனி கருவறையில் சுவாமி கைலாசநாதர் லிங்கத்திருமேனியராகக் கம்பீரமாக காட்சித் தருகிறார். இவருக்கு விஷேச காலங்களில் நாகாபரணம்,



அவருக்கு இடப்புறம் தெற்கு திசை நோக்கிய கருவறையில் ஸ்ரீ சௌந்தர்ய நாயகி அம்மை காட்சித் தருகிறாள். பிரகாரத்தில் பரிவார மூர்த்திகளாகச் சூரியன், சந்திரன், நால்வர், சுரதேவர், சப்த கன்னியர், அறுபத்து மூன்று நாயன்மார்கள், தட்சிணாமூர்த்தி, விநாயகர், மீனாட்சி சொக்கநாதர், வள்ளி தெய்வானை சுப்பிரமணியர், சண்டிகேஸ்வரர், துர்க்கை, மகாலட்சுமி, சரஸ்வதி, நடராஜர் சிவகாமி, பைரவர், நவலிங்கங்கள் ஆகியோர் காட்சித் தருகின்றனர்.

சேர்ந்தபூமங்கலம் கைலாசநாதர் திருக்கோவில் சிறப்புக்கள் இந்தத் திருக்கோவில் சுமார் ஆயிரம் ஆண்டுகள் பழமையானதாகக் கருதப்படுகிறது.

1. குலசேகரப் பாண்டியன் மற்றும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகிய மன்னர்கள் இந்தத் திருக்கோவிலை கட்டி யிருக்கலாமென கூறப்படுகிறது.

2. இங்குக் கருவறை விமானத்தின் மீது குபேரன் தன் இரு மனைவியர்களோடு யானை மீது அமர்ந்து கோலத்தில் காட்சித் தருகிறார்.

3. பொதிகை மலையில் உற்பத்தி ஆகும் தாமிரபரணி நவகைலாயங்களுள் முதல் தலமாக விளங்கும் பாபநாசத்தில் சமநிலை அடைந்து, தான் கடந்து வரும் நிலபரப்பு பகுதிகளை செழிப்படையச் செய்துவிட்டு இறுதியாக இந்தச் சேர்ந்தபூமங்லத்தை தாண்டிச் சென்று தான் கடலில் கலக்கிறது.

4. தாமிரபரணி கடலோடு சங்கமிக்கும் சங்குமுக தீர்த்தக் கட்டம்

மிகவும் பிரசித்தி பெற்றதாகும். எனவே கோவில் கும்பாபிஷேகங்களுக்கு இங்கிருந்து புனித நீர் எடுத்துச் செல்லப்படுகிறது.

### சேர்ந்தபூமங்கலம் கோவில் முக்கிய விழாக்கள்

மாசி மாத சிவராத்திரி, பங்குனி உத்திரம், சித்திரை திருவிழா, வைகாசி விசாகம், ஆடி அமாவாசை, திருக்கார்த்திகை, மார்கழி திருவாதிரை, தை அமாவாசை ஆகிய வருடாந்திர விழாக்களும், பௌர்ணமி, பிரதோஷம், தேய்பிறை அஷ்டமி போன்ற மாதாந்திர பூஜைகளும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

நடைதிறப்பு காலை 7.00 மணி முதல் 9.30 மணி வரை, மாலை 5.00 மணி முதல் இரவு7.30 மணி வரை.

இந்த ஒன்பது கோவில்களையும் ஒரே நாளில் தரிசித்தால் கைலாயத்தை அடைந்த பலன் உண்டு என்பது சான்றோர் வாக்கு. இந்த ஒன்பது கோவில்களில் தரிசனம் செய்தால் நம் பாவங்கள் நீங்குவது மட்டுமின்றி புண்ணியமும் வந்து சேரும்



## நல்வழி பாடல்கள்

பாடல் 33

வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம்(;) வேழத்தில்

பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது – நெட்டிருப்புப்

பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்

வேருக்கு நெக்கு விடும்

**விளக்கம்:**

பெரிய யானையின் மீது அம்பு பாய்ச்சினால் அது அதைக்கொன்று விடும், அதே அம்பை பஞ்சு மூட்டையில் எறிந்தால், அது மூட்டையை துளைத்து வெளியே சென்று விடும், பஞ்சுக்கு ஒரு சேதாரமும் ஆகாது. கடிய கடப்பாரைக்கு வளைந்து கொடுக்காத பெரிய பாறை, சிறிய செடியின் வேர் ஊன்றி வெடித்து உடைந்து விடும். அது போல் கண்டிப்பான குணங்களாலும், கடுமையான சொற்களாலும் ஒரு காரியத்தை சாதிக்க முடியாது. மென்மையாக இன்சொல்லுடன் பழகினால் நம்மை யாரும் அழிக்க முடியாது, கடுமையான விஷயங்களையும் சுலபமாக சாதிக்கலாம்

## திவ்ய தேச கவிதை தரிசனம் –31

# திருச்செம்பொன்செய் கோவில்



**அழ. மணிமேகலை,**
காரைக்குடி

108 திவ்யதேசங்களுள் முப்பத்தொன்றாவது திவ்யதேசம், திருச்செம்பொன்செய் கோவில். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது முப்பத்தொன்றாவது திவ்யதேசமாகும். இத்தலம், திருநாங்கூர் திவ்யதேசத்துள் ஒன்றாகும்.

திருநாங்கூரிலும் திருநாங்கூரைச் சுற்றிலும் அமைந்துள்ள பதினொரு திருநாங்கூர் திருப்பதிகளுள், திருக்காவளம்பாடி, திருஅரிமேயவிண்ணகரம் மற்றும் திருவண்புருடோத்தமம் என்ற மூன்று தலங்கள்குறித்து முன்பதிவில் கண்டுள்ளோம். இத்தலம் திருநாங்கூரில் நாம் காணப்போகும் நான்காவது தலமாகும்.

இக்கோவில் பொன்னால் செய்யப்பட்ட கோவில். அதனால் தான், இத்தலத்தின் பெயர் செம்பொன்செய் கோவில்.

இங்குள்ள

மூலவர் – செம்பொன் அரங்கர் என்ற பேரருளாளன்

தாயார் – அல்லிமாமலர் நாச்சியார்

உற்சவர் – ஹேமரங்கர் என்ற பொன்னரங்கர்

தீர்த்தம் – ஹேம புஷ்கரணி, கனக தீர்த்தம்

விமானம் – கனக விமானம்

கோலம் – கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

இங்குள்ள மூலவர் அரங்கர் எனப்படுகிறார். அரங்கர் என்று கூறினாலே, இப்பெருமாள் இராமனால் ஆராதிக்கப்பட்டவர். பெருமாள் பரமபதத்தில் இருப்பதால் அருளாளன் பரமபதத்தை விடுத்து, இங்கு வந்து நம்மோடு இருப்பதால்



1. வேதங்களில் வல்லவர்களாகத் திகழ்கின்ற மறையோர்கள் வாழ்கின்ற திருநாங்கூரின் நன்னடுவில் அமைந்துள்ளது இந்த அழகிய தலம். இத்தலத்தில் அருள்புரிந்து கொண்டிருக்கும் செம்பொன் அரங்கன் என்னும் தூய மறையோன், பாசுரங்களின் பாடுபொருளானவன். காஞ்சிபுரத்தில் வாழ்ந்துவந்த காசியபன் என்னும் அந்தணர் மிகவும் வறுமையில் வாடிக்கொண்டிருந்தார். அவர், இத்தலத்திற்கு வந்து திருமந்திரத்தை மூன்று தினங்களில், 32000 தடவை உச்சரித்து ஜபம் செய்ய, பெருமாள் திருவருளால் பெருஞ்செல்வம் பெற்றாராம். எனவே இழந்த செல்வத்தைப் பெற விரும்புவோர், பெருஞ்செல்வம் தந்த இத்தலத்து எம்பெருமானை வணங்குவோம்.

மாமறையோர் வாழ்நாங்கூர் மாநகரப் பதிநடுவண்
பாமறையின் பொருளானான் பகர்செம்பொன் அரங்கன்எனும்
தூமறையோன் அருள்கின்றான் என்றிங்கே காசியபன்
தாமகிழ்ந்து தொழச்செல்வம் தந்தானை வணங்குமினே.

பேரருளாளன். உறையூர் என்னும் திருக்கோழியில் உள்ள அழகிய மணவாளப் பெருமானே, இங்குப் பேரருளாளன் என்ற திருநாமத்தோடு எழுந்தருளியுள்ளார். எனவே, உறையூரில் இருப்பது போலவே, இங்குள்ள பெருமாளுக்கும் இரண்டு பிராட்டிகள். உறையூரில் கமலவல்லி நாச்சியார் பூமாதேவியுடன் எழுந்தருளியுள்ளார். இங்கு அல்லிமலர் நாச்சியார் பூமாதேவியுடன் எழுந்தருளியுள்ளார். தை அமாவாசைக்கு மறுநாள் நடைபெறும் திருநாங்கூரின் புகழ்பெற்ற கருடசேவைக்கு இப்பெருமானும் எழுந்தருள்கிறார்.

காப்பியக் கவிஞர் மீனவனார், “திருச்செம்பொன் செய்கோவில்” குறித்து எழுதிய ஐந்து பாடல்களும் அவற்றின் விளக்கங்களும் பின்வருமாறு.

2. இராவண சம்ஹாரம் முடிந்தபின் இராமபிரான், இத்தலத்தில் இருந்த த்ருடநேத்திரர் என்ற முனிவரின் குடிலில் தங்கினார். இராவணனைக் கொன்றதால், இராமருக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டாயிற்று. இத்தோஷத்தைப் போக்கிக் கொள்வதற்காக, முனிவரிடம் வழி கேட்கிறார், இராமர். பின் அவர் கூறியவாறு, ஆயிரம் பாரம் தங்கத்தினால், பெரிய அளவில் ஒரு பசு செய்து, அப்பசுவுக்குள் நான்கு நாள்கள் தங்கினார். பின் அப்பசுவிலிருந்து வெளிவந்தார். இதற்குக் கோப்பிரசவம் என்று பெயர். வந்தபின், அப்பசுவை ஓர் அந்தணருக்குத் தானம் செய்தார். அப்பொன் பசுவைக் கொண்டு, இக்கோவிலை அந்த அந்தணர் எழுப்பியதால், இக்கோயில் செம்பொன் செய்கோவில் ஆயிற்று. இப்பொற்கோவிலில் தான், அல்லிமலர் நாச்சியை அணைத்த தோள்களையுடைய பெருமான் அருள்புரிகின்றார்.

அல்லிமா மலர்நாச்சி அணையவருந் தோளுடையான்
வல்லரக்கர் முடிந்தவுடன் வந்தித்தத் தலம்மேவி
நல்லபகம் பொற்பசுவை நான்மறையோன் ஒருவனுக்கு
நல்கினான் அதனாலே நன்கமைந்த பொற்கோவில்.

3. தௌம்யர் என்ற முனிவரிடம் சிஷ்யனாக இருந்தவர் உபமன்யூ. உபமன்யூவானவர், தான் மற்றவர்களிடம் இரந்து வாங்கிவந்த அன்னத்தையெல்லாம், தனது குரு தௌம்யருக்குக் கொடுத்துவிட்டு, தன்பசிக்கு எருக்கம்பாலைக் குடித்து வந்தாராம். அதனால், உபமன்யூவுக்குக் கண்பார்வை கொஞ்சம் கொஞ் சமாகப் போய்விட்டது. விஷயம் கேள்விப்பட்ட தௌம்யர், உபமன்யூவைத் திருச்செம்பொன் செய்கோயிலுக்குச் சென்று, தாமரை போன்ற கண்களை உடையவனும், ஆடுகின்ற அரவத்தைப் படுக்கையாகக் கொண்டவனுமான பேரருளாளனை வணங்கி வேண்டிக் கொள்ளச் சொல்கிறார். அதே போல் மனமுருகி எம்பெருமானை வேண்டியதும், எம்பெருமான் சங்கு சக்கரதாரியாகத் தோன்றி, உபமன்யூவுக்குக் கண்பார்வை கொடுத்துத் தன்னையும் தரிசனம் செய்து கொள்ள வைத்தாராம். எனவே, இத்தலத்திற்கு வந்து, அத்தகைய எம்பெருமானின் பொன்னடிகளைத் தரிசித்து, தாயன்பைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

திருச்செம்பொன் செய்கோவில் தேடிவம்மின் என்றுரைத்த
அருட்செம்மல் தாமரைக்கண் ஆடரவப் பாயலினான்



நாளும மவற் போற்றுமினே.

5. திருமகளைத் தன்மார்பில் கொண்ட எம்பெருமான், அரக்கர்களை அழிப்பதற்காக, நெருப்பினைக் கக்குகின்ற அம்பினைத் தொடுத்தவன், படமெடுத்தாடும்

திருக்கண்ணின் பார்வைபெறத் தேடியவன் பொன்னடிகள்

தரிசிக்க வந்திடில்நீர் தாயன்பைப் பெறலாமே.

4. எம்பெருமானின் அடியைப் போற்றும் புண்ணியர்கள் அனைவரும் கண்ணியமாய் வாழ வழி காட்டுகின்றவன் வாழ்கின்ற கோவில் செம்பொன்செய் கோவில். உறுதியான மதில்சூழ்ந்த அக்கோவிலில் உறைந்திருக்கின்ற எம்பெருமானின் திருக்கழல்களை நாடி, நாளும் அவனைப் போற்றுங்கள்.

புண்ணியராய் அவனடியைப் போற்றினார் எல்லாரும்

கண்ணியராய் வாழவழி காட்டுவான் வாழ்கோவில்

திண்ணியநல் மதிசூழ்ந்த திருச்செம்பொன் செய்கோவில்

நண்ணினார் கழல்நாடி

பாம்பின்மேல் நடனமாடக்கூடிய நம்பெருமானின் பாதங்களைப் பற்றினால், உங்களுடைய துன்பம் அகலும், பயம் விலகும். அதனால் எம்பெருமானைத் தொழுதிடுங்கள்.

மடவரலைத் திருமகளை மாபுடைய சீராளன்

அடலரக்கர் திறமழிய அனற்பகழி தொடுத்தபிரான்

படஅரவில் நடமிடுவான் பாதங்கள் பற்றிடின்றும்

இடரகலும் மிடியகலும் எனவேநீர் தொழுமின்காள்.

## மங்களாசாசனப் பாடல்

களாக்கணி போன்ற நிறமுடையவனே! கண்ணா! எனது காளமேகமே! எனத் தியானித்து மனம் கனிந்திருக்கும் அடியார்களுடைய நெஞ்சத்திலே



ஊறிய தேன் போன்றவனை, நான்கு வேதங்களும் கற்ற, தெளிந்த சிந்தனையைக் கொண்ட அந்தணர் வசிக்கும் நாங்கையின் நட்ட நடுவில், செம்பொன் செய்கோவி லினுள்ளே, வளமான பேரின்பம் நிறைந்து நின்றவனை நமஸ்கரித்து அடியேன் பிறவிப் பேறடைந்தேன் எனக் கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்.

களங்கனி வண்ணா! கண்ணனே! என்தன் கார்முகிலே! எனநினைந்திட்டு

உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்துள் ஊறிய தேனை

தெளிந்த நான்மறையோர் நாங்கை நன்னடுவுள் செம்பொன்

செய்கோயிலுனுள்ளே

வளங்கொள் பேரின்பம் மன்னி நின்றானை வணங்கிநான் வாழ்ந்தொழிந்தேனே.



# நல்வழி பாடல்கள்

பாடல் 34

கல்லானே ஆனாலும் கைப்பொருள்ஒன் றுண்டாயின்

எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர் – இல்லானை

இல்லாளும் வேண்டாள்(;) மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்

செல்லா(து) அவன்வாயிற் சொல்

விளக்கம்:

ஒருவன் கல்வி கற்கவில்லை என்றாலும், அவன் கையில் பொருள் இருந்தால் அவனுடன் எல்லாரும் சென்று உறவாடுவர். கையில் பணம் இல்லாதவனை வீட்டில் இருக்கும் மனைவியும் மதிக்க மாட்டாள், பெற்றெடுத்த தாயும் வேண்டாள். அவன் சொல்லும் வார்த்தை செல்லாது, சபையில் எடுபடாது.

# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 14

அன்பர்களே!

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாகப் பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாகக் காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



மேலே காணும் பதிவின்
புற வழி இணைப்புக்கு
இங்கே சொடுக்கவும்



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

உ

## வைகாசி - ஆனி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 03.06.25 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 06.06.25 | வளர்பிறை ஏகாதசி | காலை | பெருமாள் வழிபாடு |
| 08.06.25 | பிரதோஷம் | | |
| 10.06.25 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |
| 14.06.25 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 18.06.25 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 22.06.25 | கார்த்திகை | மாலை | ஸ்ரீ ஆறுமுகர் வழிபாடு |
| 23.05.25 | பிரதோஷம் | | |



# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

கம்பவாரிதி ஐயா அவர்கள் தொடர் சுற்றுப்பயணத்தில் இருப்பதால், அவர்களால் கேள்வி பதில் அளிக்க இயலவில்லை, அவர்கள் கேள்வி பதில் அனுப்பியவுடன் அதை இந்த இதழில் பதிப்பிக்கிறோம்



# பயிற்சிப் பேழை

## ஞானசம்பந்தர் தேவாரம்



மேலே காணும் பதிவின் புற வழி இணைப்புக்கு இங்கே சொடுக்கவும்

## திருநாவுக்கரசர் தேவாரம்



மேலே காணும் பதிவின் புற வழி இணைப்புக்கு இங்கே சொடுக்கவும்

## சுந்தரர் தேவாரம்



மேலே காணும் பதிவின் புற வழி இணைப்புக்கு இங்கே சொடுக்கவும்

## திருப்புகழ்



மேலே காணும் பதிவின் புற வழி இணைப்புக்கு இங்கே சொடுக்கவும்



# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.



# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

INTERNET ARCHIVE WEB TEXTS VIDEO AUDIO SOFTWARE IMAGES SIGN UP | LOG IN UPLOAD Search

ABOUT BLOG PROJECTS HELP DONATE CONTACT JOBS VOLUNTEER PEOPLE

Koviloor Andavar Library

Member since 2016

(no description yet)

Share Favorite

UPLOADS LOANS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

6,831 Results

6,627 Results

Sort by: Weekly views Title Date archived Creator Search uploads

சுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை archived May 29, 2025 0 0 0

ஸ்ரீ கணேச கீதை archived May 29, 2025 0 0 0

காரிகை மூலமும், விருத்தியுரையும் archived May 29, 2025 0 0 0

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் archived May 29, 2025 0 0 0

சதுரகராதி archived May 29, 2025 0 0 0

திருவண்ணாமலை ஸ்ரீ அபீதகுசாம்பாஸ... archived May 29, 2025 0 0 0

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 6,831அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்குத் தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திருமதி.சோமசுந்தரி அவர்களைத் (தொலைபேசி எண் 9488124941 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

இப்போது போர்காலமாக இருப்பதால் அடிக்கடி நமது மின் நூலகம் இணைப்பு தடைப்பட்டு வருகிறது.

அவ்வாறு தடைப்பட்டு வரும் சூழலில் அதற்கு மாற்றாக தார் பிரவுசர் என்ற பிரவுசரை கொண்டு நமது நூலகத்தை நீங்கள் தொடர்பு கொள்ள முடியும். அதற்குரிய லிங்க் இத்துடன் இணைத்து இருக்கிறோம்

https://www.torproject.org/download/



# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை– கார்த்திகை

திருநெல்லை– மார்கழி

திருநெல்லை– தை

திருநெல்லை– மாசி

திருநெல்லை– பங்குனி

